உ

பெண்கள்

# ருது ஜாதக கணித சாஸ்திரம்

(குருசிஷ்ய சம்பாஷணை)



இஃது

மதுரை மாநகரம்

கவிராஜ கந்தசாமிபிள்ளை அவர்களால்

இயற்றப்பட்டது.

சண்முகானந்த புத்தகசாலை,

48, நைனியப்ப நாயக்கன் தெரு,

பார்க்டவுன், சென்னை-600003,



[விலை ரூ. 2

# பெண்கள் ருதுஜாதக கணித சாஸ்திரம்

## நவக்கிரக தேவர்கள் ஸ்தோத்திரம்

(பதினன்கு சீர்கழி நெடிலடில் ஆசிரிய விருத்தம்)

()—(ஐ)—()

பருமதி குஜபுதனே குருசுக்ரசனீஸ்வர
பாம்பெனும் ராகுகேதும்
பாரினுறுமனிதர்க்கு சுகதுக்கந்தந்திடும்
பலாபலன் சொல்வதற்கு
அருமையாய் ருதுஜாதகக் கணிதசாஸ்திரம்
ஆராய்ச்சிசெய் தெழுதிட
அன்பானயென் குருகணேசரின் கிருபையும்
ஆதிபராசக்தி யருளும்
முருகனருள் நவக்கிரக தேவரனுமந்தனும்
மும்மூர்த்தி துணையினுலும்
மூதறிஞர் சகாயத்தினுல் கணிதஜோதிட
முறைதவரு தெழுதவருள்வீர்
கருணைசேர்ரவிமதிகுஜ புதனே குருசுக்ர
காரிராகு கேதென்றிடும்
காருண்யதேவரே யெழுத்வரமருள் செய்து
காப்பாற்ற வருகுவீரே



### சீஷன் வினு-விருத்தம

அன்பானகுருவேயுந்தன் அடிமலரீனைப்பணிந்து
சின்மயானந்தஜோதி திருவருளால் பிறந்த
நன்மைசேர் பெண்களுக்கு நடக்கின்ற பலனை
[யானும்
அன்புடன் கவனித்தோத அருள் புரிவீரேசுவாமி

(இ-ள்) சுவாமி! உலகத்தில் பிறந்த பெண்களில் சிலர் ஏழையாகவும், சிலர் தனவந்தராக இருப்பதுடன், சிலர் விதவைகளாகவும், சிலர் மங்கிலிய ஸ்திரீகளாகவு மிருக்கும் காரணமும், சிலர் புத்திர சம்பத்துடனும் சிலர் மலடியாகவு மிருந்து உலகிலுலாவுவதற்குக் காரணமென்ன? தெரிவிப்பீர் குருநாதா! எ-று

### குரு-விடை

எண் சீரடி விருத்தம்

அவரவர்கள் முன்செய்த வினையினலே
அவனியில் பிறந்தே வளர்ந்து பருவ
[முற்ருல்
கவனமாய் வுது கணித சாஸ்திரத்தை
கணித்து தயலக்கின இராசிகளிலிருக்கும்
நவக்கிரகங்கள் செய்யும் பலனல் நாளும்
நடக்கின்ற பலாபலத்தை யுந்தனுக்கு
தவருமல் சொல்லுகிறேன நீயுமிந்த
தாரணியோர் பலாபலனை புகலுவாயே.

(இ-ள்) அன்பான சிஷியனே நீ கேட்ட கேள்வி சரிதான் உலகில் பிறந்த ஸ்திரீகள் முன் ஜனனத்தில் செய்த பாபபுண்யத்தின் படியே பூமியில் பிறந்து வளர்ந்து பருவதிசையடைந்த

போது வருஷம் மாதம் நக்ஷத்திரம் திதி கரணம் யோக முதலானவைகளை கவனித்து அந்த சமயத்தில் உதயமாகும் நாழிகையில் எந்த லக்கினம் அமையுமோ அதனையே உதய லக்கினமாகக் கொண்டு மற்றவை யனைத்தும் இராசியாக மதித்து அந்த துவாச இராசியாகிய மேஷம் ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம் விருச்சிகம், தனசு, மகரம், கும்பம், மீனமென்னும் பனிரெண்டு இராசியிலும் எந்தெந்த இராசியில் நவக்கிரகங்களாகிய சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு கேது யெனனும் நவக்கிரகங்களிருக்கின்றார்களோ அவற்றிற்கிசைந்த பலாபலனை போல உத்தம, மத்திப அதமபலன்களை யனுபவிபதற்காகும்.

சீஷன் கேட்பது

சுவாமி ! குருநாதா ! ஓர் ஸ்திரீ ருதுவானால் அந்த சமயத்தில் அந்தப்பெண் ருதுவான நாழிகை தெரியாமலும், இரவில் ருதுவானால் பகலிலும் பகலில் ருதுவானால் இரவிலும், அந்நியஸ்திரீகள் பார்த்து ஜோதிடனிடத்தில் வந்து ஜாதகம் கணிக்கச் சொன்னால் எந்த லக்கினத்தை கவனிப்பது தெரிவிப்பீர்.

குரு சொல்வது

ஆம் ! ஆம் ! சாதாரணமாய் ருதுவான கன்னிகையின் ஜாதகத்தை பார்க்க வந்தவர்கள் நிற்குந்திசையை முன்னதாய்க் கவனித்துக் கொண்டு ருதுவான கன்னி அணிந்திருக்கும் வஸ்திரமாகிய புடவை இன்னதென தெரிவித்தால் அவர்கள் சரிதானென்னபுகன்றால் அதனையே



ஆருடபலனை வைத்து ருது லக்கினம் இன்னதென கணித்தாராய்ந்து, சப்தம ஸ்தானத்தை கவனித்துப் பார்த்து, அந்தக் கன்னியின் மணமுகூர்த்த தினமும் ஜனன லக்கினமும் கணித்துதான பலன் சொல்ல வேண்டும்.

அவ்விதமாய்ப் பலனை சொல்லும்போது இலக்கின பலனை ஜாதகியின் விஷயத்தையும் இரண்டாவது ஸ்தானம் குடும்பத்தைப் பற்றியும் மூன்றுமிடத்தால் தைரியத்தைப் பற்றியும் நாலாமிடத்தால் சுகத்தைப்பற்றியும், ஐந்தாமிடத்தில் புத்திரர்களைப் பற்றியும், ஆறுமிடத்தால் சத்ருக்களைப் பற்றியும் ஏழாமிடத்தால் மங்கிலிய மணிந்த மணாளனைப்பற்றியும் எட்டாமிடத்தால் ஆயுளைப்பற்றியும், ஒன்பதாமிடத்தால் பாக்கியத்தைப்பற்றியும பத்தாமிடத்தால் ஜீவனத்தைப் பற்றியும் பதினோருமிடத்தால் இலாபத்தைப் பற்றியும் பனிரெண்டாமிடத்தால் விரயத்தைப்பற்றியும் சொல்லும்போது அந்தந்த ஸ்தானத்தில் எந்தெந்த கிரங்களிருக்கிறதோ அவைகளின் மூலத்திரிகோணம் கேந்திரதிரிகோண நட்பு ஆக்ஷி, உச்ச, பகை, நீச அஸ்தமய வக்கிர முதலானவைகளை ஆராய்ந்துணர்ந்து கிரகங்களின் பலாபலனைக் கவனித்து இன்னின்ன விதமாய் சுக துக்கங்கள் நடக்குமென்று சொல்ல வேண்டும்.

இவற்றுள் முக்கியமாய் கவனிப்பது துவாதஸ்தானமாகிய பனிரெண்டு ஸ்தானத்திலும் கிரகங்கள் நிற்கும் ஸ்தான பலன் போல பலன் நடந்தாலும் ஐந்தாமிடம், ஏழாமிடம், எட்டாமிடத்தையே முக்கியமாய் கவனிக்க வேண்டும் அதெவ்விதமெனில்,

வெண்பா

ஐஞ்சொன்பானென்றில் அரவுசனி குளிகள்
மிஞ்சவே நோக்க மிக விருக்க-வஞ்சியரே
சர்ப்பத்தைக் கொன்றதனல் சந்ததி கேடாகு
[மென்று
விர்ப்பத்தைச் சொன்னேம் விரைந்து.

என்னும் விதமாய் உதய லக்கினத்திலும் ஐந்தாமிடத்திலும் ஒன்பதாமிடத்திலும், சனி குளிகன், ராகு, கேது யென்னும் நானகு கிரகங்களில் எவர்களாயினு மிருந்தால் அந்த ஜாதகி முன் ஜன்மத்தில் நாகசர்ப்பத்தைக் கொன்ற தோஷத்தினல் சந்ததி யாகிய புத்திரபாக்கியங்கள் நிலைக்காமலழிந்து விடும்.

அன்றியும் முன் ஜன்மத்தில் கர்பக்கருவை அழித்தவர்களுக்கு புத்திரஸ்தானதிபதி மூன்று ஆறு, எட்டு, பன்னிரெண்டாமிடங்களில் பகை நீசம், அஸ்தமனம், வக்கிரமாய் இருப்பதுடன் புத்திரகாரனகிய குருபகவானும திரிதியஷ்—ரம விரைய ஸ்தானத்தில் வக்ர அஸ்தமன நீசமாய் சனி, கேதுடனே சேர்ந்திருந்தாலும் மலடியா யிருப்பதற்காகும்.

சீசன் சொல்வது
எண் சீர்டி விருத்தம்

கன்னிகைகள் பருவதிசையடைந்த பின்னர்
கணிதாராய்ச்சி செய்து உதயலக்னம்
இன்னவித மென்றதனை தெரிந்து கொண்டு
இராசிகளில் கிரகங்களிருக்கும் மார்க்கம்
நன்மையா யெந்தனுக்கு தெரியசொல்லும்
நம்பி வந்துன்சமுகம் வினவுமென்னை
அன்புடனே ஆகரித்து விபரமாக
அருள் செய்வீர் குருநாதா பணிகின்றேன்.



குருநாதா! உலகில் பிறந்த கன்னிகள் பருவ திசை யடைந்தால், அவர்களுக்குரிய பலன் சொல்வதற்காக அவர்கள் பருவதிசை யடைந்த இலக்கின பலனை எவ்விதமாய் பிரித்தெழுத வேண்டுமோ அதை விபரமாக அடியேனுக்கு அருள் செய்வீர் குருநாதா!

குரு சொல்வது
எண்சீரடி விருத்தம

மண்ணிதில் வாழுகின்ற பெண்களெல்லாம்
வளர்ந்து வயதான பின் ருதுவானுலே
வன்மையுடன் பஞ்சாங்கந்தனிலிருக்கும்
வகையான திதி நக்ஷத்திரகரணயோகம்
துண்ணிரிவாலாருந்து நாழிகையில் வந்த
நுணுக்கத்தால் உதயலக்னம் கணிந்து
எண்ணிக்கையாய் கிரமம் நிற்கும் நேர்மை
எடுத்துரைத்து வாழ்நாளின் பலனை

(இ-ள்) உலகில் பிறந்து வளர்ந்த பெண்கள் தமது வயது வந்த காலத்தில் சரீரம்பூரித்து பருவ திசையடைந்த தேதியின் மணிகணக்கை சொன்னல் அதன்படியே அந்த வருஷத்தின் பஞ்சாங்கத்தில் குறிப்பித்திருக்கும், மாதம், தேதி, திதி, நக்ஷத்திரம் யோகம், கரண முதலிய வற்றை கணித்து அவர்கள் சொன்ன கடிகார மணியை சூரியோதய நாழிகையாகக் கணக்கெடுத்து, மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி துலாம், விருச்சிகம், தனசு, மகரம் கும்பம் மீனம் யென்னும் பனிரெண்டு இராசியும் கணித்து. ஜாதகர் சொன்ன மணியை நாழிகையாக கணித்து எந்த இராசியில் உதய

இலக்கினம் வருகிறதோ அதை கவனித்துக் கொண்டுமற்ற பதினோறு ஸ்தானபலன்களையும் சொல்ல வேண்டும்.

அதன விபரம் மெவ்விதமெனில்:-

ஜாதகங்கேட்க வருபவர் பிரமோதூத வருஷம் வைகாசிமாதம் 17-ந் தேதி இரவு 10 மணிக்கு ஓர் பெண் ருதுவான தென்று சொன்னால் அதற்கு ஜாதகங்கணிக்கும் விபரம்:-

ஷை மாதத்தின் 17-ந் தேதி வரியாலே பார்த்து கொண்டு வந்தால் கிழமை நக்ஷத்திரம் திதி, யோக, கரண மெல்லாம் குறிப்பிக்கப்படும் அதன் விபரம் கவனிப்பாய் பிரமோப்தூத வருஷம் வைகாசி மாதம் 17-ந் தேதி வெள்ளிக் கிழமை துதியை திதி 31- விநாடிக்கு மேல் திரிதியை திதி திருவாதிரை நக்ஷத்திரம்45-நாழிகை 20-விநாடிக்கு மேல் புனர்பூசம் சூரியோகம் 22-50க்கு மேல்கண்ட யோகம் கௌலவகரணம் 35-விநாடிக்கு மேல் வணிசாவா கரணம இத்தியாதி யமைந்திருக்கும் தினத்தில் அன்றிரவு 10-மணி யென்றால்:-

இதனை சூரியோதய நாழிகையாக கணிதராராய்ச்சி செய்யும் விபர மெவ்விதமென்றால்,

1-மணிக்கு 2½ நாழிகையாகும்

இங்கிலீஷ் கணிதம் காலையில் 6-மணியிலிருந்து பகல் 12-மணிவரைக்கும் முடியுமென்பது காலபிரமாணம்.

இவ்விதமே பகலிரவு 24-மணி நேரமானால் ஒரு நாளாகும் இது இங்கிலீஷ் கால அளவு.



தமிழ் கணக்கின்படியே காலையில் சூரிய உதயமாயிருந்து அந்தியில் மறைந்து விடியற் காலத்தில் சூரிய உதயமாகும்பொழுது பகலிரவு சேர்ந்து ஒரு நாளென குறிக்கப்படும்.

அன்றிரவு 1-மணிக்கு 2½-நாழிகையானல் 16-மணிக்கு 2½-யைப்பெருக்கினல் 40-நாழிகையாகும்.

உதாரணம்-16½யில் பெருக்க 40 நாழிகை

ஆகையால் ஜாதகி ருதுவானது வைகாசி மாதம் 17-தேதி இரவு 10-மணியானல் அன்றைய காலையிலிருந்து பகல் வரைக்கும் 12-மணி அதன் மேலிட்டு இரவு 10-மணி ஆனல் 6-10 16-மணி ஆகிறது 16½ 40-நாழிகை ஆகும் இந்த வேளையில் இலக்கினம் கணிதமாவது எவ்விதமெனில் 60-நாழிகைக்கும் 12-இராசி நடக்கும் அவைகளில் எந்தஇராசியில் கணிதம் வந்து நிற்குமோ அதுதான் உதய லக்கினமாகும்.

அதன் விபரமெவ்விதமெனில்:-

| | | | |
|---|---|---|---|
| மீனம் 41-4 உபயம் | மேஷம் 41-4 சரம் | ரிஷபம் 4-45 ஸ்திரம் | மிதுனம் 51-4 உபயம் |
| கும்பம் 4-45 ஸ்திரம் | பகலிரவு 1-நாளைக்கு | | கடகம் 51-2 சரம் |
| மகரம் 51-4 சரம் | 60-நாழிகைகு 12-இராசிக்கும் | | சிங்கம் 51-4 ஸ்திரம் |
| தனுசு 51-2 உபயம் | விருச்சி 51-4 ஸ்திரம் | துலாம் 5 சரம் | கன்னி 5 உபயம் |

இவ்விதமிருக்கையில் ருதுவான நாள் வைகாசி 17-ந்தேதியாகையால் 30-ந் தேதியாகிய ஒரு மாதம் வரைக்கும் ஆகிய ஒவ்வொரு ராசியில் சூரியன் சஞ்சரிப்பதால் வைகாசிமாதம் சூரி

யன் ரிஷபராசியில் சஞ்சரிப்பார். அப்போது சூரிய உதயத்தில் ரிஷபமே உதய லக்கினமாய் ஆரம்பித்தால் 1-தேதியாகையால் ரிஷபம் 4-45 நாழிகையில் செல்லானது 7-கரணி 22 1/2 விநாடியாய் மீதியிருப்பாயாகிய ரிஷபராசியில் இருப்பு 2-மணி 2½-விநாடி யிருப்பாகி அங்கிருந்து 40-நாழிகை அதனை உதயலக்கினமாய் அமைத்துக் கொள்ளவேண்டியது.

இலக்கனம் கணிக்கும் விபரம்

வைகாசிமாதத்தி லமைந்த ரிஷபராசியில் கணிதாராய்ச்சியின் படியே இரண்டுமணி 22½ விநாடி இருப்பு நிற்பதால் அங்கிருந்து எண்ணிக்கையாக சூர்யோதயாதி 40-நாழிகையில மையும் இலக்கனம மகரமென தீர்மானஞ் செய்யவேண்டும்.

இதன்விபர மெவ்விதமெனில் :—

| | | | | |
|---|---|---|---|---|
| ரிஷபம் | 2-நாழிகை | | 22½-விநாடி | |
| மிதுனம் | 5 | ,, | 15 | ,, |
| கடகம் | 5 | ,, | 10 | ,, |
| சிங்கம் | 5 | ,, | 15 | ,, |
| கன்னி | 5 | ,, | ,, | ,, |
| துலாம் | 5 | ,, | ,, | ,, |
| விருச்சிகம் | 5 | ,, | 15 | ,, |
| தனுசு | 5 | ,, | 10 | ,, |
| மகரம் | 5 | ,, | 15 | ,, |

இவ்விதமாய் கணக்கெடுத்தால் மகரலக்னமாகும் இனி பனிரெண்டு இராசியிலும் கிரகங்களிருக்கும் விபரமும் கவனிப்பாய். வைகாசி



நக்ஷத்திர பாதசாரங்களில் கிரகங்களிருப்பது

| | |
|---|---|
| கிருத்திகை | 2-ல் சூரியபகவான் |
| திருவாதிரை | 4-ல் சந்திரபகவான் |
| அஸ்வனி | 2-ல் செவ்வாய்பகவான் |
| கிருத்திகை | 2-ல் புதபகவான் |
| மிருகசீரிடம் | 2-ல் குருபகவான் |
| திருவாதிரை | 3-ல் சுக்கிரபகவான் |
| பூராடம் | 1-ல் சனிபகவான் |
| சுவாதி | 1-ல் கேதுபகவான் |
| அஸ்வனி | 3-ல் இராகுபகவான் |

இருப்பதாய் கிரகபாதசாரங்களைப்பார்த்து கணித்து வைத்துக்கொண்டு இராசி சக்கரம் போட்டுக்கொண்டு அதன் பலனை ஆராயந்துணர்ந்து பலன் சொல்லும்போது ஆருட பலனை யனுசரித்துக் கணக்குடன் சொன்னல் பலன் சரியாயிருக்கும்.

மேற்குறிப்பித்த கிரகபாதசாரத்தை யனுசரித்து. இராசி சக்கரம் அமைத்தல் விபரம்:—

| | | | |
|---|---|---|---|
| | செ ராகு | சூ பு | ச-சு குரு |
| | | | |
| ல | | | |
| சனி | | கே | |

இவ்விதமாய் கிரகங்களமைந்திருந்தால் இதற்கு பலன் விபரத்தை கவனிக்கும் முறையை இதில் குறிப்பிக்கலாயினேன், ருதுவான நாழிகையை யனுசரித்து கணிதாராய்ச்சி செய்து பார்த்தால் மகர லக்கனம் வந்ததென்று தீர்மானஞ் செய்த விதமாகவே எந்தெந்த வேளையில் எந்தெந்தமணி யென்று

சொல்லுகிறீர்களோ அதைமுன் போலவே மணி கணிதக்கை நாழிகையாக செய்து துவாதச லக்னமமைபடியான 12 வீடுகள் போட்டு சக்கர மெழுதியும் அந்த வருஷ மாததேதி நாழிகையில் நக்ஷத்திர பாதாங்களிலிருக்கும் கிரகங்களை ராசி சக்கரங்களில் போட்டுப் பார்த்து பலன் சொன்னால் சரியாய் அமைந்திருக்கும்.

சீஷன் சொல்வது

எண் சீரடி விருத்தம்

எனதினிய சற்குருவே ஜோதிடத்தை
 எளிதிலேயானுணர விபரமாக
மனதிலன் பாய்ப்பதிய உபதேசிப்பீர்
 மாகஷிமைதங்கியபுவியில் வாழ்வோர்கட்கு
தன தான்ய சம்பத்து புத்திர பாக்யம்
 தருகுவதும் தவறுவதும் விபரமாக
விளவினேன் சொல்வீரென் றுமறுபாதம்
 வேண்டினேன்புகன் றிடுவீர்ஞானவாழ்வே

(இ-ள்,) எனது அன்பான குருநாதரே ஜோதிட சாஸ்திரத்தை யான் சுலபமாய்க்கற்று ணர்ந்து பலன் சொல்ல வேண்டுமென யோசித்து தமது திருவருளை சிந்தித்து தமது சமூகம் வினவினேன் தாங்களென் மனதில் விபரமாய்ப் பொருந்தும் படியா்க அனுக்கிரகம் செய்வீரென்று வேண்டினேன் குருநாதா.

குருசொல்வது-வசனம்

சிஷ்யா ! கவனிப்பாய், உலகில் வழங்குவது 60-வருஷம், மாதம் 12, திதிகள் 15, வளர்பிறை தேய்பிறையில் 15-மாக வரும் நக்ஷத்திரம் 27-ம் யோகம் 27-ம் கரணம் 11-இலக்கினம் 12-ம்



மாறி மாறி வருவதால் அந்தந்த சமயத்தில் பெண்கள் ருது ஆன காலத்தை யனுசரித்து தான் பலன் சொல்ல வேண்டும்.

அன்றியும் முன்பாக தெரிவித்த இலக்கின கணித ஆராய்ச்சியின் படியேதான் கணக்கெடுத்து 12-இராசியில் எதில் ருது ஆன நாழிகை நிற்கின்றதோ அந்த இராசியையே உதயலக்கினமாக வைத்துக்கொண்டு மற்ற இராசிகளை -3-4-5-6-7-8-9-10-11-12 ஸ்தானங்களாக மதித்துக் கொண்டு அந்தந்த ஸ்தானங்களின் கிரகங்களிருக்கும் நிலையைக் கண்டு தான் பலன் சொல்ல வேண்டும்.

ஆனல் இவையனைத்தும் பிறகு விபரமாக தெரிவிக்கிறேன் கவனித்துக் கொள்வாய் இனி 12-மாதங்களின் பலனைச் சொல்வேன் கவனி.

சித்திரை மாதத்தில் ஓர் பெண் ருதுவானல் சூரியன் உச்சம் பெற்றிருப்பதினல் குரு கடகத்தில் உச்சமாகவும், சந்திரன் ரிஷபத்தில் உச்சமாகவுமிருந்து செவ்வாய் கடக லக்கினத்தில் நிற்க ருதுவானல் அந்த கன்னிகை தனதான்ய சம்பத்துடைய கல்வியிற் சிறந்த மணளனை மணந்து சுபமங்கிலிய ஸ்திரீயாய் பொன் பொருள் பூஸ்திதியுடன் வாழ்ந்திருப்பதற்காகும்.

ஆனல் மகரத்தில் குருவும் கன்னியில் செவ்வாயுமிருந்தால் அந்த ஜாதகி விதவையாய் பல நாளும் துன்பமடைந்து மைந்தர் சகாயமில்லாமலும் பந்துக்கள் முன் கஷ்டப்பட்டு காசு சேகரித்து ஜீவனஞ் செய்துக் கொண்டிருப்பாள் இவ்விதமே எவ்வொரு கிரகபலனையும் ஆராய்ந்துணர வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| | சூ பு | சு-ச | ராகு |
| | சித்திரை மாத பலன் | | |
| சனி | | | |
| கே | | குரு | செ |

இவ்விதமாய் சித்திரை மாதத்தில் ஓர் பெண் ருதுவானல் அந்த வேளையில் மேஷ லக்கினமும் குடும்பஸ்தானத்தில் சுக்கிரனு சந்திரனுமிருக்க மூன்ருமிடத்தில் ராகும் ஜனன லக்னத்தில் சூரியனும் ஆருமிடத்தில் புதனும் செவ்வாயு மிருக்க, கேது ஒன்பதிலும் சனிபத்தாமிடத்தினு மிருந்தால் அந்த ஜாதகியின் தகப்பன் மிகுந்த சாதுவாகவும் ஏழைவாகவும் மிருந்தாலும், அந்த ஜாதகி பருவதிசையடைந்த இலக்கன பலத்திஞல் மகா தனவந்தனுமாகிய இராஜாங்க உத்தியோகஸ்தனை மணம் புரிந்து சுகஜீவியாய் தனதான்ய சம்பத்துடன் வாழ்ந்திருப்பதற்காகும்

ஆனல் ஜாதகி தன்தாய்விட்டில் ஏழையாயிருந்து மணாளன்விட்டில் வந்துக்கானந்தமாய் தனவதியாயிருந்தாலு ஒன்பதாமிடத்தில் கேது இருப்பதால் சர்ப்பதோஷம் விலக்கிக்கொண்டால் புத்திரபாக்கியமு முண்டாகும். அதனல் வெகு கீர்த்திப் பிரகாசமாகவே யிருப்பதற்காகும்.

ஆனல் இலக்கினத்தில்சூரியனும் 7-ல் சனி. செவ்வாயிருந்தால் உடனே புருஷன் மரணமாய் விதவையாவாள்.

ஜன்மத்தில் இராகும் சூரியனுமிருக்க ஜன்மாதிபதி 6-ல் நீசமடைந்திருக்க, 7-ல் செவ்வாயு மிருந்தால் ரோகியா யிருப்பதற்காகும் 8-ல் குருவும், அஸ்டமஸ்தானதிபதியை சனி, அங்கார



கன் பார்த்தால் ஜாதகிசுமங்கிலியாய் மரணமாவாள்.

மேற்குறிப்பித்த இராசி சக்கரத்தில் குறிப்பித்திருக்கின்றபடியேகிரகங்களமைந்திருந்தாலும் அந்தந்த ஸ்தானத்திலிருக்கும் கிரகங்கள் வக்கிரம் அஸ்தமனம் பகை நீசமாயிருப்பதுடன் இலக்கினம் சரராசியாயிருந்து அந்த இராசி நாதனை சனி, இராகு பார்த்தால் ஜாதகி தன் வீட்டை விட்டு விலகி பலவிதமான சஞ்சலத்தினல் வருமையாற் களைத்திளைத்து துயரப்படுவதுடன் பலருக்கும் பகையா யிருப்பதற்காகும்.

இலக்கினத்தில், குருஉச்சமாகவும் 6-சனியும், 7-ல் சூரியனும், 8-ல் புதனும் சந்திரனும் 5-ல் செவ்வாயும் 6-ல் இராகும் 1-ல் கேதுமிருந்தால் அந்த ஜாதகி பிறந்த ஸ்தானம் பிரபு விடாயிருப்பதுடன் மணம் புரிந்த மணாளனும் இராஜாங்க உத்தியோகஸ்தனயிருக்கும் பிரபுவை மணஞ்செய்துக்கொண்டு உத்தமபுருஷனல் சுகபாக்கிய மனைத்தும் அனுபவித்து உத்தம புத்திரர்களைப்பெற்று தனதான்ய சம்பத்துடன் பந்துக்களுடனே வாழ்ந்திருப்பதற்காகும்.

இலக்கினத்தில் சனியும் 2-ல் இராகும் 8-ல் சந்திரனும் 6-ல் குரு சுக்கிரனுமிருக்க ஆறுமிடத்ததிபதி பகை நீசமாய் 6—8—12 மிடத்தில் வக்கிர அஸ்தமனமாயிருந்தால் ஜாதகி வாக்கில் வருவனைத்தும் விபரீத சொற்களாய் பலருக்கும் பகைமூட்டும் தன்மையான கலகவார்த்தையாயிருப்பதுடன் மாமி, நாத்தி மைத்துனன் மாமனர் கொடுமையால் மனங்கலங்கி சண்டைச் சச்சரவு செய்து துயரப்படுவார்கள். களஸ்திர ஸ்தானதிபதியும் வக்கிரமா யிருந்தால் வீட்டை விட்டு விலகிப்போவாள்.

7-ல் உச்சமாகவும், இலாபஸ்தானத்தில் சந்திரனும் சுகஸ்தானத்தில் அங்காரகனும் சுக்கிரனுமிருந்தால் அந்த ஜாதகி மிகுந்த கீர்த்திப்பிரகாசமா யிருப்பதுடன் தனது குடும்பத்தில் மிகவும் மேன்மைபெற்ற குடும்ப ரக்ஷகியாயிருப்பதற்காகும்.

இவ்விதமே சித்திரை மாதத்தில் ருதுவான பெண்களின் ஜாதக லக்கின துவாதசி ராசியிலும் எவ்வெவ்விதமாக கிரகங்கள் நிற்கின்றார்களோ அவ்விதமேதான் சுகதுக்கத்தையனுபவிக்கச் செய்வார்கள் என்பதை கவனித்துப் பலனுரைப்பீர்கள்,

| | | | |
|---|---|---|---|
| குரு ல-சு | செ | சூ | பு |
| கே | வைகாசி | | சந் |
| சனி | மாத பலன் | | ராகு |
| | | | |

வைகாசி மாதத்தில் இவ்விதமாய் ஓர் பெண் ருதுவான வேளையில் மீனலக்கினமாகவும், இலக்கினத்தில் குரு ஆக்ஷியாகவும் சுக்கிரன் உச்சமாகவும் ஸ்தானத்தில் செவ்வாய் ஆக்ஷியாகவும் 3-ம் சூரியனும் 4-ல் புதன் ஆக்ஷியாகவும், 6-ல் இராகு 11-ல் சந்திரன் 5-ல் ஆக்ஷியாகவும், சனி 12-ல் கேதுவுமிருந்தால் இந்த ஜாதகி தனதான்ய சம்பத்தும் பொன் பொருள் பூஸ்திதியுடைய மணாளனை மணந்து சுகஜீவியாய் சகலரும் புகழ்ந்துரைக்கும் படியான மேன்மையுடையவளாய் ஜீவித்திருப்பதுடன் புத்திர பாக்கியங்களை விசேஷமாய்ப் பெற்று பெரிய குடும்பியாகவும் வாழ்ந்திருப்பதற்காகும்.



இவ்விதமே சிம்மலக்கினத்தில் ருதுவான பெண்களுக்கு எந்தெந்த கிரகங்கள் எந்தெந்த ஸ்தானத்திலிருக்கின்றதோ அந்தந்த விதமாகவே மாதபலன் நடக்குமென்றறிவீர்கள்.

புரட்டாசி மாதத்தில் கன்னியா லக்கினத்தில் ருதுவான பெண்களுக்கு சூரியன் விரயாதிபதியா யிருந்து இலக்கினகேந்திர மேறி குரு பார்வை பெற்று ஆட்சி உச்சம் பெற்றும் இலக்னுதிபதியா யிருக்கும் புதனுடன் சம்பந்தமா யிருப்பதினுல் ஜாதகி தனது சிறுவயதிலிருந்தே சுகஜீவியாய் வளர்ந்து கல்வியில் தேர்ச்சியால் சங்கீத சாஹித்யத்திற் தேர்ச்சியடைந்து சாஸ்திர புராண ஆராய்ச்சியில் தேர்ச்சியாகி தனதான்ய சம்பத்துடைய உத்தமபுருஷனை மணம்புரிந்து புத்திர பாக்கியங்களுடனே வெகு மேன்மையா யிருப்பதற்காகும் ஜாதகிக்கு சுககளஸ்திரஸ்தானுதிபதி ஆக்ஷிபெற்று களஸ்திரஸ்தானத்தி லிருப்பதாலும் ஜாதகி மணம் புரிந்த காலத்திலிருந்து புருஷனுல் சுகசௌக்கியமும் ஆளடிமையும்பந்துக்கூட்டத்தார் பூஜிதமும் பெற்று வெகு மேன்மையாய் ஜீவிப்பதற்காகும்.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| சனி ராகு | புரட்டாசி | | சந் |
| | மாத பலன் | | கே |
| | | | ல சூல |

ஆனுல் புத்திரகாரனுகிய குருவும் புத்திரஸ்தானுதிபதியாகிய சனியும் ஆட்சி பெற்றிருப்பதனுல் ஜாதகிக்குப் பிறக்கும் பிள்ளைகளும் கல்வியிற் சிறந்தவர்களாய் இராஜாங்க உத்தியோகஞ் செய்து வெகு பொருள் சேகரித்துத் தாய் விசுவாசமாயிருக்கும் படியான தன்மையும் மேன்மையும் கீர்த்தியும் பொருந்தியிருக்கும்.

ஆனல் கன்னியாலக்கினத்தில் சுக்கிரனிருக்க புதன் ஆருமிடத்திலும், குருவும் இராகும் மேஷத்திலு மிருந்தால் ஜாதகிக்குப் பரபுருஷ சேரமும அன்னவஸ்திரத்திற்கும் பஞ்சமும் நேரிட்டுக் கலங்கச்செய்யும்.

இராகு ஜன்ம லக்கினமாகிய கன்னியிலும் பஞ்சமஸ்தானதிபதியாகிய சனி அஷ்டமத்திலும் குரு விரயஸ்தானமாகிய சிம்மத்திலுமிருந்தால் ஜாதகிகு எத்தனை பிள்ளைகள் பிறந்தாலும் நிலைத்திருக்காமல் கஷ்டமும கவலையும் சூழ்ந்து புருஷ துரோகியாய் மனைளை மகியாமலிருப்பதுடன் அமங்கலியாயிருப்பதற்காகும்,

ஆனல் கன்னியா லக்கினத்தில் ருதுவான பெண்ணுக்கு புதன் உதயலக்கினத்லும், சனி துலாராசியில் உச்சமும், இராகு கும்பத்திலும் கேது சிம்மத்திலு மிருந்தாலும், குரு மகரத்திலும் மிருந்தால் ஜாதகி விசேஷமாய்ப் பிள்ளைகளைப் பெற்று சுகஜீவியா யிருப்பதற்காகும்.

கன்னியா லக்கினத்தில் குருவும் புதனும் அங்காரகனு மிருக்கும் போது ருதுவான பெண் மனதைரியமாகவும், உற்சாகமாகவே தனது வாழ்நாளைக் கழித்துக் கொண்டிருப்பதற்காகும் ஜாதகிக்கு உத்தம மணளனும், நற்குணம் மைந்த புத்திரர்களுமாயிருந்து மேன்மை படுத்துவார்கள்.

இவ்விதமே கன்னியா லக்கினத்தில் ருதுவான பெண்களுக்கு எந்தெந்த ஸ்தானத்தில் கிரகமிருக்கின்றதோ அந்தந்த ஸ்தான பலனுக்கிசைந்த விதமாய் ஜாதகி தனது ஆயுள் வரையினும் சுகதுக்கமாகிய பலனை அனுபவிப்பதற்காகும்.



றுமிருப்பதினல் ஜாதகிக்குப்பிறக்கும் பிள்ளைகள் மகாதனவந்தரா யிருப்பதற்காகும்.

ஆனல் இலக்கினத்தில் ராகும் விருச்சிகத்தில் சனியும், மேஷத்தில் குருவுமிருந்தால் அந்த ஜாதகி துன்மார்க்க புருஷனிடத்தில் அகப்பட்டு பலவித துன்பமடைந்து வறுமையால் துடிதுடித்துக் கஷ்டப்படுவதுடன் அன்னதரித்திரமாயிருப்பதற்காகும்.

அன்றியும் குருவும், சூரியனும், புதனும், அங்காரகனும் உதயலக்கினத்திலேயே யிருக்க கேது பனிரெண்டாமிடத்திலும், இராகு ஆருமிடத்திலும் சனி ஆருமிடத்தில் ஆட்சியாகவுமிருப்பதுடன் சந்திரன் ஜீவன ஸ்தானமாகிய ரிஷபத்தில் உச்சப்பெற்று மிருந்தால் ஜாதகிக்குத் தாய்வீடு வெகு மேன்மையான தனவந்தராயிருந்தாலும் களஸ்திர தானதிபதியாகிய சனி ஆருமிடத்தில் மறைவு ஸ்தானத்தில் ஆக்ஷிபெற்றிருப்பதினல் ஜாதகிக்குவெகுகாலம் பொறுத்து மணமானலும் மகா தனவந்தனைகவும் பிரபுத்தன்மையான உத்தம புருஷனை மணம்புரிந்து ஆதார அனுஷ்டானத்துடன் விரதனுஷ்டானம்புரிந்து அன்னதானஞ்செய்து குடும்பரக்ஷகியாயிருப்பதுடன் கீர்த்திப் பிரகாசமாய் உத்தம புத்திரர்களைப் பெற்று காண்போர் பிரபுத் தன்மையானவர்களென்றுபுகழ்ந்துரைக்கும் படியான தனவந்தரா யிருப்பதற்காகும் சந்திரன் உச்சம் பெற்றிருந்தால் ஜாதகியின் மாதுர் வர்க்கமும் பிரபுத்தன்மையா யிருப்பதற்காகும்.

சிம்மலக்கினத்தில் ருதுவான பெண்ணுக்கு குடும்பாதிபதியாகியபு தன் இலாபத்திலிருந்தா

லும் இலக்னதிபதி 12ம்மிடத்திலிருக்க சனி 3-ம் மிடமாகிய துலாராசியில் உச்சம் பெற்று 10-ம் மிடத்தி லிருப்பதால் ஜாதகியின் தாய் வீடு சதாகாலமும் பெருமையாய் வாழ்ந்திருப்பதுடன் இந்த ஜாதகிக்கு ஆயுள்வரையிலும் தாய் விட்டின் சீர் விசேஷமாய் நடக்கும்.

எந்த பெண்களாகிலும் சிம்மலக்கினத்தில் ருதுவானால் சூரியன் மேஷத்தில் உச்சம் பெற்றிருப்பதுடன் சனி களத்திரஸ்தானமாகிய கும்பத்தில் ஆட்சி பெற்றிருந்தால் ஜாதகியின் தகப்பன் சிறுவயதிலேயே மரணமானாலும் தனவந்தனையே மணம் புரிந்து சுகஜீவியாயிருப்பதற்காகும்.

ஆனால் எந்த கிரகங்கள் எந்தெந்த ஸ்தானத்திலிருந்தாலும் குருவானவர்சிம்ம லக்கினத்திற்கு பஞ்சம்அஷ்டம ஸ்தானதிபதியாயிருந்து இலக்கினத்திலிருந்தால் ஜாதகியின் புத்திரர்களால் சுகசௌக்கியமுடன் அன்னவஸ்திரத்திற்கும் பஞ்சமில்லாமல் சதா காலமும் சுகசௌக்கியமாயிருந்து குடும்ப ரக்ஷகியா யிருப்பதற்காகும்.

இலக்கினத்தில் சனி இராகு சூரியனுமிருந்து அங்காரகன் கடகத்தில் நீசமாயிருந்தால் ஜாதகிக்கு புத்திரர்களில்லா வறுமையாற் கலங்கி துயரடைவதற்காகும்.

பஞ்சமஸ்தானபதி ஒன்பதிலும் இலக்கினதிபதியும் குருவும் உதயலக்கினத்திலுமிருந்தால் ஜாதகி விசேஷ புத்திர பாக்கியங்களினுவிருப்பதற்காகும். இரண்டாமிடத்ததிபதி ஆட்சி பெற்றிருந்தால் குடும்ப ரக்ஷகியாயிருப்பதற்காகும்.



யாகவுமிருந்தால் அந்த ஜாதகி உத்தமபுருஷனை மணம் புரிந்து தனது அண்ணன் தம்பிகளின் சகாயத்தினுல் வெகு சீர்த்தியடைந்து பொன் பொருள் பூஸ்திதிகளுடனே புத்திர பாக்கியங்களுடனே வெகு மேன்மையாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

12-ல் குருவும் 6-ல் சுக்கிரனும் 4-ல் சனியும் 7-ல் செவ்வாயுமிருந்தால் ஜாதகிக்கு சீக்கிரத்தில் மணமாகாமல் வெகு நாள் பொறுத்து மணமானாலும் மணளனை இழந்து விதவையாயிருந்து வாழ்நாள் வரையிலும் மனசஞ்சலமாயிருப்பதற்காகும்.

இலக்கினத்தில் குருவிருப்பது தான் பெருமையாகும், இவ்விதமே ஆனி மாதத்தில் ருதுவான பெண்களின் ஜாதக கணிதராய்ச்சிசெய்து பலன் சொல்ல வேண்டும்.

ஆடி மாதத்தில் இவ்விதமாய் ஓர் பெண் ருதுவானல் இவற்றிற்கு உரிய பலன் விபரம்

| | | | |
|---|---|---|---|
| குரு | | | கே |
| | ஆடி | | ல சந் |
| | மாத பலன் | | சூரி |
| ராகு | செ | சு | பு |

இலக்கினத்தில் சந்திரனும் 2-ல் சூரியனும் 3-ல் புதன் 4-ல் சுக்கிரனும்5-ல் செவ்வாயும் ஆக்ஷியாயிருக்க 6-ல் இராகும், 12-ல் கேதுமிருக்க ஒன்பதில் குரு ஆக்ஷியாகவு மிருந்தால் அந்த ஜாதகி தனவந்தள் புத்திரியாய்பிறந்து கல்வியில் தேர்ச்சியடைந்து சுக சவுக்கியமாயிருந்தாலும் சுகஸ்தானத்தில் சனி உச்சம் பெற்று இலக்கினத்தைப் பார்த்தால் ஜாதகிக்கு எவ்வளவு

சவுக்கியமிருந்தாலும் மன விசாரமாய் ஆசார அனுஷ்டானத்துட னிருப்பதற்காகும். அந்த சனியே களஸ்திரஸ் தானதிபதியா யிருந்தால் கல்வியிற் சிறந்த வித்தியாபி விர்த்தியிற் கீர்த்தி பெற்று இராஜாங்க உத்தியோகஞ் செய்யும் பிரபுவை மணஞ் செய்துக்கொண்டு சுகசவுக்கிய மாய் பொன் பொருள் பூஸ்திதியுடனே புத்திர பாக்கியங்களுடனே மேன்மையாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

இலக்கினத்தில் இராகு 4-ல் சனி சூரியன் 6-ல் குரு சந்திரனிருந்தால் அந்த ஜாதகி கனது தகப்பனுக்கு விரோதியாய் விபசாரியாயலைந்து திரிவதற்காகும்.

10-ல் செவ்வாய் 11-ல் சுக்கிரனும் இலக்கினத்தில் சப்தமாதிபதியுமிருந்தால் அந்த ஜாதகி மனைவியைப் பிரியாமல் மகாதனவதியாய் பந்துக்கள் புகழும் சுகபாக்கியசாலியாயிருப்பதற்காகும்.

இவ்விதமே அந்தந்த கிரகங்களின் பலனை ஆராய்ந்துணர்ந்து பலன் சொல்ல வேண்டும்.

ஆவணி மாதத்தில் ருதுவான பெண்கள் நல்ல குழந்தைகளைப் பெறுவார்கள் ஆனால் ருதுகால வேளையின் இலக்கினத்தில் சூரியன்

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | ஆனி மாத பலன் | | கே |
| ராகு | | | சூல சுக் |
| குரு | | | ச-பு செ |

ஆட்சி பெற்றும் சுக்கிரனுடனே சம்பந்தமாயிருப்பதுடன் குடும்பாதிபதியாகிய புதன் ஆட்சி உச்சமாய் சுகபாக்கியாதிபதியாகிய அங்காரகனுடனே சம்பந்தமா யிருக்க சனி துலாவில் உச்சம் பெற்றும் குரு ஆட்சி பெற்



ஆனவிவ்வித மில்லாமல் லக்கினத்திற்கு 7-ல் ராகு 8-ல் அங்காரகன் குரு, சுக்கிரன், [illegible] சனி, 8-லிருந்தால் அச்ஜாதகி துன்மார்க்கனை மணந்து பலநாளும் துன்பமடைந்து குடும்பத்தார்க்கெல்லாம் விரோதியாய் துன்பமுற்று மனைவனை இழந்து விதவையாய் துயரமடைந்திருப்பாள்.

இலக்கினத்தில் சனியும், 2-ல் கேதும் 3-ல் சூரியனும் குரு 6-ல் சுக்கிரன் 7-ல் இருந்தால் அந்த ஜாதகி பலபுருஷர்மீது மோகங்கொண்டவளாய்க் கற்புநிலை தவறி யிருப்பதற்காகும். ஆனால் ஜாதகி வெகு சமர்த்தாய் குடும்பத்தார்கட்கு அ[illegible] யிருப்பதற்காகும்.

இலக்கினத்தில் சுக்கிரன் உச்சம் பெற்றிருக்க புதன் சுகஸ்தானத்தில் ஆக்ஷி பெற்றிருக்க 7-ல் குரு, 6-ல் இராகு, 12-ல கேதுமிருந்தால் ஜாதகி ஆசார அனுஷ்டானமுடைய பிரபுவை மணம் புரிந்து சுகஜீவியா யிருப்பதற்காகும்.

இவ்விதமே வைகாசி மாதத்தில் ருதுவான பெண்களின் ஜாதக கணிதராய்ச்சிசெய்து கிரக நிலையைக் கண்டு பலன் சொல்லவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| | செ | சு கே | சூ பு சந் |
| சனி | ஆனி மாத பலன் | | |
| | | | குரு |
| | ராகு | | |

ஆனி மாதத்தில் இவ்விதமாய் ஓர் பெண் ருதுவான வேளையில் மிதுன லக்கினமும் அதில் சூரியன், புதன் சந்திரனுமிருந்து [illegible]-ல் குரு [illegible]ச்சமும் 9-ல் சனி ஆக்ஷியும் 11-ல் செவ்வாய் ஆக்ஷியா 6-ல் இராகு உச்சமும்

யாகவுமிருந்தால் அந்த ஜாதகியின் வாழ்நாள் வரையில் சுகஜீவியாகவே யிருப்பதற்காகும் எவ்விதமெனில் ஜாதகியின் பிதுர்ஸ்தானதிபதியும மாதுர்ஸ்தானதிபதியும் மூத்த சகோதர ஸ்தானதிபதியும் ஆக்ஷிபெற்றிருப்பதனல் ஜாதகி பிறந்த இடத்திலும பொன் பொருள் பூஸ்திதியுடனே நிறைந்த சம்பத்தும் கல்வியும் ஞானமும் கற்றுணர்ந்த சம்பத்தும் கல்வியும் காண்போர் மெச்சுந் தன்மையான ரூபசுந்தரியாக வளர்ந்து ஆசார அனுஷ்டானத்துடன் இராஜாங்க உத்தியோகஞ் செய்து பிரபலமாய் சகலரும் புகழ்ந்துரைக்கும தனவந்தனை மணம புரிந்து உத்தம புத்திரர்களுடனும் வெகு மேன்மையாக வாழ்ந்து சுமங்கலியாக பகவான் திருவடியடைவதறகாகும்.

ஆனல் இலக்கினத்தில் இராகும் 7-ல் கேது 6-ல் குரு சுக்கிரன் 4-லசூரியனுமிருந்தால்இந்த ஜாதகி பலநாளும் துயரமும துன்பமுமடைந்து விபசாரியாயலைவதறகாகும்.

7-ல் செவ்வாய்; 9-ல் இராகு, 12-ல் குரு விருந்தால் அந்த ஜாதகிக்கு மஞ்ளதோஷமும புத்திர தோஷமுண்டாகி புருஷனை இழந்து புத்திரர்களையுமிழந்து தனியா யலைவதற்காகும்.

10-ல் சனியும் 8-ல் அங்காரனும் வக்கிரம் அஸ்தமான மாயிருந்தால் ஜாதகிக்கு ஜீவனமகப்படாமல் கூலிவேலை செய்து ஜீவிப்பதற்கும் சக்தியில்லாமல் துயரப்படுவதாயிருக்கும்.

3-ல் சூரியன் ஆக்ஷியாகவும் 4-ல் புதன் ஆக்ஷி உச்சமாகவும் 7-ல குரு ஆக்ஷியாகவும் 2-ல சந்திரன் ஆக்ஷியாக சுக்கிரன் 5-ல் ஆக்ஷி



ஐப்பசி மாதத்தில் ருதுவான பெண்களுக்கு துலாலக்கின மாயிருந்து சூரியனுக்கு சுக்கிரனும் இலக்கின கேந்திரத்திலிருக்க அங்காரகனும் புதனும் இரண்டாமிடத்திலும் நிற்க குரு சந்திரன் ஜீவனஸ்தானத்திலும் சனி இலாப ஸ்தானத்திலுமிருக்க இராகு ஆருமிடத்திலும் கேது பன்னிரெண்டிலுமிருந்தால் விசேஷ நன்மையுண்டாயிருப்பதுடன் உத்தம புருஷனும் சற்புத்திரர்களும் வெகு குடும்பத்தினரும் பொருந்தின தான்ய சம்பத்துடன் பொன் பொருள் பூஸ்திதிகளுடன் பொருந்தி தனவதியாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

| | | | |
|---|---|---|---|
| ராகு | | | |
| | ஐப்பசி மாத பலன் | | சந் |
| | | | சனி |
| | செ பு | கு-ல சுக் | கே |

அதெவ்வித மென்றல் இலக்கினதிபதியாகிய சுக்கிரன் ஆட்சி பெற்று இலாபாதிபதியாகிய சூரியனுடனே சம்பந்தமாக யிருப்பதியாகிய சூரியனுடனே சமபந்தமாக யிருப்பதனல் ஜாதகியின தகப்பன் வெகு பொருள் சேகரஞ் செய்யும் தனவந்தனகவும்,மாதுர்ஸதானதிபதியாகிய சனி இலாபஸ்தானத்தி லிருப்பதனல், ஜாதகியின் தாய் விசேஷ லாபகரமுடையவளாயிருந்து தனது புத்திரியை வெகு மேன்மையாய்க் காப்பாற்றி உத்தம ஸ்திதியுடனே ஒழுங்காய் வைத்திருப்பதற்காகும்.

களத்திர ஸ்தானதிபதியாகிய அங்காரகன் சபாக்கியஸ்தானதிபதியாகிய புதனுடனே சம்பந்தமாய் குடும்ப ஸ்தானத்திருப்பதால் ஜாதகியை பொன் பொருள் பூஸ்திதியுடைய தனவந்தன் மணம் புரிந்து ஜாதகிக்கு வேண்டிய ஆபரணதிகளிந்து ஆசபாசமாய் வைத்திருப்பது

4

டன் ஜாதகி தனதான்ய சம்பத்தும் பொன் பொருள் பூஸ்திதியுடன் வெகு மேன்மையாய் குடும்பரக்ஷகியா யிருப்பதற்காகும், புத்திரஸ்தானதிபதியாகிய சனி இலாபஸ்தானத்திலிருப்பதனால் ஜாதகியின் புத்திரன் வெகுகீர்த்திமானுகவும் வெகு பொருள் சேகரித்து லாபாதிபதியாயிருப்பவனும் மாதா விஸ்வாசியாயிருப்பதற்காகும். ராகு ஆறுமிடமாகிய சத்துருஸ்தானத்திலிருப்பதினால் ஜாதகிக்குசத்துரு பயமில்லாமலும் ரோகபய மில்லாமலும் மிருப்பதற்காகும் கேது பனிரெண்டா மிடமாகிய கன்னியிருப்பதால ஜாதகி அடக்கம், பொறுமை, சாந்தம், தயாளம். ஸௌசாருண்யம் நிறைந்த உத்தமியாயிருப்பதற்காகும்,

ஆனல் உதயலக்கினத்தில் இராகு சூரியனுமிருக்க சனி மேஷத்திலும் குரு மகரத்திலுமிருக்க சந்திரனும் நாலிலிருந்தால அங்காரகன அஷ்டமஸ்தானத்திலிருக்க அந்த ஜாதகி வெகுநாள வரையிலும் மணமில்லாதிருந்து துன்மார்க்கரை மணம் புரிந்து பலவித துன்பமடைந்து வறுமையால கலங்கி பிறகும் புத்திரர்களை யில்லாமிழந்து தனிமரம் போல் தத்தளித்து ஆதரவுமல்லாமல அலங்கோலமாய் மனுஷனை இழந்து அமங்கலியா யிருப்பதற்காகும்.

அன்றியும், இலாபாதிபதியாகிய சூரியன் ஆட்சிபெற்று சிமமத்திலிருக்க நாலாமிடத்தில் சந்திரனும குருவுமிருந்தால ஜாதகி மனதிற்கிசைந்த மனுஷனை விட்டு சுஜாதி வ்யபசாரியாயிருப்பதற்காகும். சனி அஷ்டமஸ்தானமாகிய ரிஷபத்திலிருந்தால இலக்கினாதிபதியாகிய சுக்கிரன வியயஸ்தானமாகிய கன்னியிலிருக்க தானாதிபதியாகிய அங்காரகன் அஷ்டமஸ்தானத்திலிருக்க

புத்திர ஸ்தானாதிபதியாகிய சனி ஒன்பதாமிடமாகிய மிதுனத்திலிருந்தால் ஜாதகி மிகுந்த ஏழ்மையா யிருப்பதற்காகும் பிதுர்ஸ்தானாதிபதியாகிய புதனுந்திரிதிய ஸ்தானத்திலிருந்தால் ஜாதகி சதாகாலமும் ஏழையா யிருப்பதுடன் விவாகமாகாமல் வெகுநாள் வரையிலுமிருந்து விவசாரியாயலைந்து அன்னதரித்திரமாயிருப்பதற்காகும்.

ஆனல் துலாலக்கினத்தில் ருதுவான பெண்ணுக்கு இலக்கினத்தில் சனி உச்சமாகவும் சூரியன் நீசமாகவுமிருந்து உதயலக்கினத்திலேயே சேர்ந்திருந்தால் ஜாதகிக்கும பிதாவுக்கும் சதாகாலமும் விரோதமாகவே யிருக்கும களத்திரஸ்தானத்தில் இராகுமிருந்தால் ஜாதகி வாயாடியாயிருப்பதுடன் சகலருக்கும் விரோதியாயிருப்பதற்காகும்.

துலாலக்கினத்தில் ஓர் பெண் ருதுவானல் அந்த லக்கினதிபதி குடும்பஸ்தானத்திலும் அங்காரகன் மகரத்தில் உச்சமாகவுமிருந்தால் அந்த ஜாதகி சகலருக்கும் நல்லவளா யிருப்பதுடன் சாஸ்திர புராணங்களை வகுத்துக் கீர்த்தி பிரகாசமாயிருப்பளாவாள்.

இவ்விதமே துலா லக்கினத்தில் ருதுவான பெண்களுக்கு எந்தெந்த ஸ்தானத்தில் கிரகங்கள் எந்தெந்த விதமா யிருக்கின்றார்களோ அந்தந்த விதமாகவே ஜாதகிக்கு சுப அசுபபலன்களைக் கொடுப்பதற்கிசைந்த விதமே சுகதுக்கங்களை அனுபவிப்பதற்காகுமென்று கவனிக்க வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | சந் | |
| | கார்த்திகை மாத பலன் | | |
| சனி | | | |
| குரு சூ | ல-பு செ | கே | |

கார்த்திகை மாதத்தில் விருச்சிக லக்கினத்தில் செவ்வாயும் புதனுமிருக்க குடும்பஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் சூரியன், குரு சுக்கிரனுமிருக்க மூன்றுமிடத்தில் சனியும் சத்துரு ஸ்தானமாகிய ஆறுமிடத்தில் ராகும், 7-மிடமாகிய களத்திரஸ்தானத்தில் சந்திரனிருந்தால் இஜ்ஜாதகி தனவந்தனை மணம் புரிந்து குடும்ப ரக்ஷகியா யிருப்பதுடன் தன தான்ய சம்பவத்தினால் மதோன்மத்தம் மேலிட்டு எவர்களையும் மதியாமல் அலக்ஷியமாய் மதித்துக் குடும்பத்தினரை தூஷித்து இகழ்ச்சியாய்ப்பேசி சகலரையும் விரோதித்து கலகஞ் செய்பவளா யிருப்பதற்காகும்.

அதெவ்விதமெனில் இலக்கினாதிபதியாகிய செவ்வாய் ஆட்சி பெற்று இலக்கினத்தி லிருப்பதுடன் அஷ்டமலாபாதிபதியாகிய புதன் உதய லக்கினத்திலேயே யிருப்பதால் ஜாதகி வித்யா சமர்த்தும் பூஸ்திதியுடையவளா யிருப்பதற்காகும். ஜீவனஸ்தானாதிபதியும் பிதுர்க்காரகனுமாகிய சூரியன் களத்திரஸ்தானாதிபதியாகிய சுக்கிரனுடனே சம்பந்தமாய் குடும்பஸ்தானாதிபதியாகிய குருவுடனே சம்பந்தமாய், குடும்பத்திலேயே இருப்பதால், ஜாதகி தனவந்தனை புத்திரியாயிருப்பதுடன் வித்தியாசமர்த்தும் தனசேகரஞ் செய்யும் பிரபுவை மணம்புரிந்து சுகஜீவியா யிருப்பதுடன் இனத்தாரை மதியாமல் அலட்சியமாய் மதித்து மனோகர்வியா யிருப்பதற்காகும்.

அவ்விதமில்லாமல் இலக்கினத்தில் கேதும் சப்தம ஸ்தானத்தில் இராகும் ஆறுமிடத்தில் குருவும், நாலாமிடத்தில் சனி சூரியனு மிருந்தால் ஜாதகி சதா துன்பமும் துயரமுமனுபவித்துப் பலவித கஷ்ட நஷ்டங்களை யடைந்து விபசாரியாயலைந்து துஷ்டர்களால் பலவித துன்பமுற்றிருப்பதற்காகும்.



ஆனால் விருச்சிக லக்கினத்தில் ருதுவான பெண்ணுக்கு களஸ்திரகாரகனும் சப்தமஸ்தானாதிபதியுமாகிய சுக்கிரன் மீனத்தில் உச்சமாகவும் இலக்கினாதிபதியாகிய அங்காரகன் திரிதியஸ்தானமாகிய மகரத்தில் உச்சம் பெற்றிருந்தால் ஜாதகி தனது சகோதரர், மணாளனாலும் பிரபுத்தன்மையை யிருப்பதற்காகும்.

குரு பஞ்சமஸ்தானத்தில் ஆட்சி பெற்றிருந்தால் ஜாதகியின் புத்திரன் புத்திகூர்மையாயிருந்து இராஜாங்க உத்தியோகம் புரிந்து திரவியஞ் சேகரஞ்செய்து வெகு மேன்மையாயிருப்பதுடன் ஜாதகிதனது புத்திரனுடைய பெருமையினால் கீர்த்தி பிரகாசமா யிருப்பதற்காகும்,

அன்றியும் ஜீவஸ்தானாதிபதியாகிய சூரியனும் அஷ்டமலாபாதிபதியுமாகிய புதனும், இலக்கினத்திலிருந்தால் ஜாதகியின் தந்தை பல நாளும் திரவிய வந்தனா யிருப்பதுடன் ஜாதகிக்கு பலவித நன்மையும் புரிந்து சதாகாலமும் திரவிய சகாயம் செய்து மேன்மை படுத்தும் படியான நன்மையுண்டாகும்.

இவ்விதமே கார்த்திகை மாதத்தில் நடக்கும் நாள் 60-நாழிக்குள் எந்த நாழிகையில் ருதுவாகிறதோ அதற்கிசைந்த விதமாய் இலக்கினங் குறிப்பித்து துவாதச ராசியில் எந்தெந்த ஸ்தானத்தில் கிரகமிருக்கின்றதோ அந்தந்த ஸ்தானபலனையும் கிரகங்களிருக்கின்ற பலத்தை

யும் அனுசரித்துப் பார்த்துப் பலன் சொல்லும் போது அந்தந்த கிரகங்களின் நட்பு ஆட்சி உச்சமும் ஆராய்ந்துணர்ந்து பலனையும் சொல்ல வேண்டு மென்பது ஜோதிடகணித வல்லோர் வாக்கியமாகும்.

மார்கழி மாதத்தில் ருதுவான பெண்களுக்கு இவ்விதமாய் தனசு லக்கினத்தில்குருவு ஆட்சியாகவும் குடும்ப ஸ்தானத்தில் செவ்வாய் உச்சம்பெற்றும் சத்துரு ஸ்தானத்தில் சந்திரன் உச்சம்பெற்றும் சனி இலாபஸ்தானத்தில் உச்சம் பெற்றிருக்க களத்திரஸ்தானாதி பதியாகிய

| | | | |
|---|---|---|---|
| | | சந் | கு பு சுக |
| ராகு | மார்கழி மாத பலன் | | |
| செ | | | கே |
| வ குரு | | சனி | |

புதன் சப்தமஸ்தானத்தில் ஆட்சி பெற்று சுக்கிரன் சூரியனுடனே யிருப்பதால் இந்த ஜாதகி பிறந்த நாள் முதற்கொண்டு மனதைரியமாகவும், வித்தையில் தேர்ச்சியடைந்து வர்த்தகனை மணம் புரிந்து சுக சவுக்கியமாயிருப்பதற்காகும். பஞ்சம விரயதானாதிபதியாகிய அங்காரகன் குடும்ப ஸ்தானத்தில் உச்சம் பெற்றிருந்தால் ஜாதகியின் புத்திரன் வித்தியாசமர்த்தனாய் இராஜங்க உத்தியோகம் புரிந்து கீர்த்தி பிரகாசமா யிருப்பதற்காகும். அதனால் வெகு மனோல்லாசமாய் குடும்பரக்ஷகியாக மேன்மையாயிருப்பதற்காகும்.

விரயஸ்தானமாகிய விருச்சிகத்தில் சனியும் புத்திரன்தானாதிபதியாகிய அங்காரகனுடனே குரு, புதன், சுக்கிரன், சூரியனும் சேர்ந்து சர ராசியாகிய மகரத்திலிருக்க அந்த இராசிஜாதகி ருதுவான இலக்கினத்திற்கு குடும்பஸ்தானமா



கையால் ஜாதகி பெண்களும் பிள்ளைகளும் பெற்று பெரிய குடும்பமாயிருப்பதற்காகும்.

ஆனல் இலக்கினத்தில் சுக்கிரன்சூரியனும் நாலாமிடத்தில் செவ்வாயும் ஏழாமிடத்தில் சனியுமிருந்தால் ஜாதகிவிபசாரியாயிருந்தாலும் வெகு புத்திரரைப் பெற்று வறுமையாள் கலங்குவாள்.

இலக்கினத்தில் குரு ஆட்சியும் நாலாமிடத்தில் சுக்கிரன் உச்சமும, இலாபஸ்தானத்தில் சனி உச்சமாயிருந்து ஆரும்இடத்ல்ல் சூரியனும் ஏழாமிடத்தில் புதன் ஆட்சியாயிருந்தால் ஜாதகி தனது சிறு வயதிலிருந்து பருவதிசையடைந்து வியாபாரியை மணந்து சுகஜீவியாயிருப்பதற்காகும் அங்காரகன் புத்திரஸ்தானாதிபதியா யிருந்துகுடும்ப ஸ்தானத்தில்உச்சம் பெற்றிருந்தால ஜாதிக்குப் பிறக்கும் புத்திரர்கள் மிகவும பிரக்தியான இராஜயோகத்தையனுபவிப்பதற்காகும்.

ஆனல் தனுசு லக்கினத்தில் ருதுவான பெண்ணின் புத்திரஸ்தானாதிபதியாகிய செவ்வாய் கடகத்தில் நீசமடைந்து இராகுடனே சம்பந்தமா யிருந்தால் ஜாதகியின் புத்திரன் விவேகமில்லாதே துன்மார்க்கனாய் துஷ்டர்களுடனே சேர்ந்து சோம்பேறித்தனமாய் தாய்தகப்பனுக்கடங்காத தறிதலையா யலைவதற்காகும்.

இலக்கினாதிபதியான குருவும் லாபாதிபதியான சுக்கிரனும் புத்திரஸ்தானாதிபதியான செவ்வாயும் குடும்பஸ்தானமாகிய மகரத்திலிருந்தால் ஜாதகிக்குப் பிறக்கும் பிள்ளைகளும் பெண்களும் மகாதன வந்தவராகவும் ஐஸ்வரியத்தில் சிறந்த பிரபுக்களாகவு மிருப்பதற்காகும்.

இவ்விதமாகவே மார்கழி மாதத்தில் எந்தெந்ததேதியில் எந்தெந்தவேளையில் பெண்கள் ருதுவானாலும் அந்தந்தசமயத்திற்கு எந்தெந்த இலக்கினம் வருகிறதோ அதை கவனித்துக் கணித்தாராய்ந்து அந்த சமயத்தில் எந்தெந்த இலக்கின உதயமாகிறதோ அதை கவனித்தும் துவாதச ஸ்தானத்திலிருக்கும் கிரகங்களிலிருக்கும் பலாபலனைக் கவனித்தும் பலன் சொல்ல வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| | | | ராகு |
| சூரி | தை மாத பலன் | | |
| சு-பு சனி | | | |
| கே குரு | | | |

தைமாதத்தில் ருது வான பெண்களுக்கு இவ் விதமாய் மகரலக்னத்தில் சந்திரன் புதன் சனி சுக் கிரனுமிருக்கும் குடும்பஸ் தானத்தில் சூரியனும் சத் துரு ஸ்தானத்தில் இரா கும் பனிரெண்டாமிடமா தியவிரயஸ்தானத்தில் குரு வும் கேதும் சேர்ந்திருந்தால், அந்த ஜாதகி தனது புருஷனுக்கடங்கிய உத்தமியாகவும் புருஷவிஸ்வாசியாகவும் தெய்வபக்தியிற்சிறந்து நற்குணமிகுந்த தனவானை மணம்புரிந்து விரதா னுஷ்டானம் புரிந்து அன்னதானஞ் செய்யும் தர்மகுணம் பொருந்தியவளாயிருப்பதற்காகும். சத்துரு ஸ்தானத்தில் இராகு இருப்பதால் ஜாத கிக்குமாமியார், நாத்திஞர்மைத்துனன் மணளன் முதலானோர் பகையில்லாமல் சுத்தமனத இருப்பதற்காகும்.

ஆனல் இலக்னதிபதி ஜீவனஸ்தானமாகிய துலாவில் உச்சம் பெற்றும் குரு திரிதியஸ்தா னத்தில் ஆக்ஷி பெற்றுமிருந்தால் ஜாதகி சத னலமும் வறுமையில்லாமல் சுக ஜீவியாய் தன ான்ய சம்பத்துடனே ஜீவித்திருப்பதற்காகு



புத்திரஸ்தானமாகிய ரிஷபத்தில் சந்திரன் உச்சம்பெற்றும குரு களத்திர ஸ்தானமாகிய கடகத்தில் உச்சம் பெற்று மிருந்தால் ஜாதகி தனவந்தனை மணம் புரிந்து சுகஜீவியாய் வாழ்ந் திருந்து நற்குண புத்திரர் புத்திரிகளைப் பெற்று அவர்களால் சுகசவுக்கியமா யிருப்பதற்காகும்.

இலக்கினத்தில் ராகும் நான்காமிடத்தில் சனி சூரியனுமிருந்து மூன்றுமிடத்தில் அங்கார கனுமிருந்தால் ஜாதகி வெகு தைரியமாய் பரபுரு ஷனைச் சேர்ந்து விபசாரியா யலைந்தாலும் புத்தி ரர்கள் நிலைத்திருக்க மாட்டார்கள்.

லக்னதிபதி 6 மிடத்திலிருக்க பகை கிரகங் கள் பார்வை செலுத்தியும் அஷ்டமாதிபதி வக் ரித்திருந்தால் ஜாதகி சதாகாலமும்வியாதியா, யிருந்தாலும் பலவித கஷ்டங்கள் தோற்றும

புத்திரகாரனதிய குருவும் புத்ரஸ்தானதி பதியாகிய ஐந்தாமிடத்தானும் இலக்கின கேந்திரத்திலிருக்க புத்திரஸ்தானத்தை சுபக்கிர கங்கள் பார்த்தால் ஜாதகி நற்குணம் பொருந் திய புத்திரர்களைப் பெற்றும்சுகஜீவியாய்வாழ்ந் திருப்பதற்காகும்.

களத்திரஸ்தானதிபதி ஆக்ஷி உச்சகேந்திர கோண ஸ்தானங்களிலிருந்தால் ஜாதகியின மணளன் பிரபல வியாபாரியாகவும் உத்தியோ கஸ்தனகவும் கீர்த்திப் பிரகாசமாக வாழ்ந்து காண்போர் மதிக்ககூடிய குடும்பரக்ஷகியாக வாழ்ந்து சதாகாலமும பெருமையாய் ஜீவித் திருப்பதற்காகும்.

சப்தமஸ்தானதிபதி வக்கிரமாகவும் களத் திரஸ்தானத்தில் சனி இராகுசேர்ந்திருக்க இலக் கினத்தில் சூரியனிருக்க சத்துரு ஸ்தானததில் குரு சுக்கிரனிருந்தால் ஜாதகிக்கு சதாகாலமும

மாமி நாத்தியின் கொடுமையும் சண்டைசச்சரவு நேரிடுவதுடன் துஷ்டமனுளனுல் சதாகாலமும் அடி உதைபட்டுப் பல்வித மனசஞ்சலமாயிருப்பதற்காகும்.

திரிதயஸ்தாநாதிபதியும் இலாபஸ்தாநாதிபதியும் பகை கிரகங்களாயிருந்த இலக்கினாதிபதிக்குப் பகையாகவுமிருந்த சனி ராகு சூரியன் சம்பந்தமாய் இலக்கினத்தைப்பார்த்தால் ஜாதகியின் சகோதரர்களால் பலவிததுன்பமடைந்து சதாகாலமும் சண்டைசச்சரவு செய்துக் கொண்டிடிருப்பதற்காகும்,

ஆனுல் சகோதரஸ்தாநாதிபதிகள் சுபக்கிரகங்களாயிருந்து இலக்கினத்தைப் பார்த்தால் ஜாதகியின் சகோதரர்கள் வெகு திரவியம் சேகரஞ் செய்து சகோதரவாஞ்சையுடையவர்களாய் ஜாதகிக்கு உத்தம புருஷனை மணஞ் செய்வித்து சதாகாலமும் ஜாதகிக்கு வெகு பொருள் சகாயஞ் செய்து ஆசாபாசமாயிருப்பதற்காகும்.

இவ்விதமே மகரலக்கினத்திற் பிறந்த ஜாதகிக்கு எந்தெந்த ஸ்தானத்தில் என்னென்ன விதமா யிருக்கின்ருர்களோ அந்தந்த விதமாய் பலன் தருவார்கள்.

• •

| | | | |
|---|---|---|---|
| குரு சூரி | சந் சு | கே | |
| சனி ம பு | மாசி மாத பலன் | | — |
| ராகு | | | — |
| — | செ | | |

மாசிமாதத்தில் ருதுவான பெண்களுக்கு இவ்விதமாய் கிரகங்களிருந்தால் பலனறியும் விபரமெவ்விதமெனில் இலக்கினத்தில் சனி ஆட்சியாகவும் புதன் நட்பாகவுமிருந்தால் ஜாதகி தனது பெற்ருேரிடம் பிரியமா



யிருந்து வித்யாசம்பத்துடனும் பூமி மனையுடன் வெகு பிரபலமாய் வாழ்ந்து மேன்மையான உத்தம குணம் பொருந்திய இராஜாங்க உத்யோகஸ்தனை மணம்புரிந்து சுகஜீவியாயிருப்பதற்காகும்.

ஆனுல் பஞ்சமஸ்தானத்தில் கேது இருப்பதினல் சர்ப்பதோஷ விமோசனஞ் செய்தால் ஜாதகிக்கு புத்திரர்கள் பிறந்து வெகு சமர்த்தராய் வளர்ந்து தனதான்ய சம்பத்துடன் வாழ்ந்திருப்பார்கள்.

ஜீவனஸ்தானத்தில் அங்காரகன் ஆகிய கவும் விராஸ்தானத்தில் இராகு நட்பாகவும் அந்த ஜாதகிக்கு மண்மனை வீடுகள் முதலானவையும் பொருந்தி யிருப்பதுடன் தனதான்ய சம்பத்துடன் பொன் பொருள் பூஸ்தியுடன் தனவதியாயிருப்பதற்காகும்.

ஆனுல் சூரியனும் சனியும் சுகஸ்தானத்திலிருந்தால் ஜாதகி மனுளனுடனே விரோதமாகவே யிருப்பதுடன் விருஷ்துபராகியா யிருப்பதுடன் சதா சண்டை சச்சரவாயிருப்பதற்காகும் இவ்விதமான ஜாதகியை மணபுரிபவன் வாழ்நாளெல்லாம் வீண்நாளாகவே கழிப்பதுடன் கலகாரம்பமாகவே யிருப்பதற்காகும், சூரியன் சனி ராகு சேர்ந்து நாலிலிருக்க இலக்கினத்தில் செவ்வாய் பகையாயிருந்து நான்காமிடத்தின் பார்வையாய் சனி இராகுடனே சேர்ந்திருக்கும் களஸ்திர ஸ்தானதிபதியாயிருக்கும் சூரியனைப் பார்த்தால் ஜாதகி தன்னுயிரை கொடுத்தாகிலும் மனளனைக் கொல்லுத் படியான வஞ்சகுரூர மாபாவியா யிருப்பதற்காகும்.

கும்ப லக்னதிபதியாகிய சனி உச்சம்பெற்றுப் பிதுர் ஸ்தானமாகிய துலாராசியி லிருக்க

களஸ்தியஸ்தானாதிபதியாகிய சூரியன் ஜீவன ஸ்தானமாகிய விருச்சிகத்திலிருந்தால் ஜாதகி தனவந்தன் புத்திரியாயிருந்து வெகு மேன்மை யாக ஜீவித்திருந்தவளாவாள் மங்கிலியமணிந்த மணாளனே துணையென மதித்து புருஷவிஸ்வாசி யாய் சதாகாலமும் புருஷனுக்கு பணிவிடை செய்துக்கொண்டு விரதானுஷ்டானம் புரிந்து புத்திர பாக்கியங்களுடனே குடும்பரக்ஷியா யிருப்பதற்காகும்.

இவ்விதமே கும்பலக்கினத்தில் ருதுவான பெண்களுக்கு எந்தெந்த கிரகங்கள் எங்கெந்த ஸ்தானத்தில் எவ்வெவ்விதமா யிருக்கின்றார்க ளென்று கவனித்துதான் பலன் சொல்லவேண் அவ்விதமாய் பலன் சொல்லும்போது அந்தந்த சமயத்தில் நடக்கும் திசாபுத்தி பலனையும் அனு சரித்துதான் பலன் சொல்லவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| சூல புகுசு | செ | | |
| ராகு | பங்குனி மாத பலன் | | சந் |
| சனி | | | கே |
| | | | |

பங்குனி மாதத்தில் இவ் விதமாய்ருதுவான பெண் களுக்கு எந்தெந்த ஸ்தா னத்திலிருக்கின்றார்க ளோ அந்தந்த விதமாய் பலன்கொடுப்பார்களென் றறியவும்எவ்விதமெனில் பெண்கள்ருதுவான இலக் னம் மீனமாயிருக்கஅதில் சூரியனும் குரு, புதன், சுக்கிரனுமிருந்தால் ஜாதகி தனவந்தனுடைய புத்திரியாய்ப் பிறந்து வித்தையிலும் புத்தியிலும் யுத்தியிலும் சிறந்து சங்கீத க்யானத்தில் தேர்ச்சி யடைந்து பிரபல மான வியாபாரியை மணம் புரிந்து புத்திரிகளும் புத்திரர்களுமாய்ப் பெற்று விசேஷதனவந்தாம் யிருக்கும்பதில் சம்பந்தஞ் செய்துக் கொண்டு



தனவதியென சகலரும் புகழுந் தன்மையாக பிரக்யாதியிடனிருப்பதற்காகும்.

தனபாக்யாதிபதியாகிய அங்காரகன் 2-ம் மிடத்திலேயே ஆக்ஷி பெற்றிருந்தால் ஜாதகி மணிபொருளுடன் விசேஷ நன்மையாய் ஜீவித் திருப்பதற்காகும்.

இலாப விரயாதிரிதியாக சனி இலாபஸ்தா னத்திலிருந்து சந்திரனுக் பார்வை செலுத்தப் பட்டால் ஜாதகி தாய்வீட்டின் செல்வபுத்திரி யாயிருந்து சதாகாலமும் பொன் பொருள் பூஸ் திதியுடனே எந்த விஷயத்திலும் மேன்மையா யிருப்பதுடன் ஏதாயினும் வியாபாரஞ் செய்தா லும் விசேஷ லாபத்துடனே இருப்பதற்காகும்.

பங்குனிமாதத்தில் பிறந்த பெண்களுக்கு காலையில் மீனலக்கின மாயிருந்து அன்றைய பகலிரவு வரையினும் நடக்கும் அறுது நாழி கையில் வரும் பனிரெண்டு ராசியில் எந்தெந்த ராசியில் ருதுவான நாழிகை ஏற்படுகிறதோ அதையே உதயலக்கினமாகக் கொண்டு துவாத சமஸ்தானத்திலு மிருக்கும் கிரகங்கள் கொடுக் கும் பலனைச் சொல்லும்போது மீன இலக்கினத் தில் குருவும் சப்தமஸ்தானமாகிய கன்னியில் புதனுமிருந்தால் அந்த ஜாதகி வியாபார தன வந்தனை மணம்புரிந்து பிரபுத்தன்மையாய்ஜீவித் திருப்பதற்காகும்.

குரு சொல்வது

எண்சீரடி விருத்தம்

மதியுள்ள என்சிஷ்யா மா நிலத்தின்
மங்கையர்கள் பனிரெண்டு லக்கினத்தில்
மதிரவியும் குஜபுடனும் குருவும் சுக்ரன்
மந்தனும் ராகு கேதுநின்ற ஸ்தானம்

பதியவெந்த ஸ்தானத்தில் நின்ருரென்று
பார்த்துணர்ந்துபலன் சொல்லுமவர்க்கு
நிதிமிகுக்கும் தன்னமயின்னின்னதென்று
நீணிலத்தினர் பலனைச் சொல்லலாமே.

(இ-ள்) அறிவிற் சிறந்த மாணவனே உலகத்தில் பிறந்த பெண்கள் ருதுவாகும் காலத்தில் அவரவர்கள் முன்ஜெனனத்தில் செய்தபாப புண்ணிய அளவின்படியே சுகதுக்கத்தை யனுபவிப்பதற் கிசைந்த விதமே சிலர் ருதுவாகும் போது நவக்கிரகங்களாகிய சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேதென்னும் ஒன்பது கிரகங்களும் மேஷம் ரிஷபம் மிதுனம் கடகம் சிங்கம் மகரம் கும்பம் மீனமென்னும் பனிரெண்டு ராசியிலும் எந்தெந்த விதமாய் சுகதுக்கமனுபவிக்கும் படியான சுப சுகபலனைத்தருவார்கள்.

அந்த கிரகங்க ளொன்பது பேரும் கேந்திர கோண திரிகோணஸ்தானங்களில் நட்பு ஆட்சி உச்சமாயிருந்தால் உத்தம புருஷனை மணமபுரிந்து சற்புத்திர பாக்கியங்களைப் பெற்று பொன் பொருள் பூஸ்திதியுடன் தனதான்ய பசு பாக்யங்களுடன் பகவத் பக்தியானந்தமாய் ஆசாரஅனுஷ்டானத்துடன்சுகசவுக்கியகீர்த்தி பிரகாசமாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

ஆனல் மேற்குறிப்பித்த பனிரெண்டு இராசிகளில் நவக்கிரகங்கள் பகை கிரகங்கள் சமபந்தமாகவுமிருப்பதுடன் பகைகிரகங்களின்பார்வைபெற்றுமிருந்தால் ஜாதகிக்கு வெகுநாள் வரையினும் மணமாகாமலும் புத்திரபாக்கிய மில்லாமலும் வறுமை சூழ்ந்து வியாதியால் மெலிந்து விடுவார்கள்.



சீஷன் சொல்வது
எண்சீரடி விருத்தம்

நன்மையுள்ள குருநாதா பெண்களுக்கு
ஞானமதில் மணமாகா திருப்பதென்ன
பொன்பொருளும் பூஸ்திதியுமில்லாமற்ருன்
புசிப்பதற்கும் அன்னமில்லா திருப்பதேனே
பன்னுவீரெனக்கதனை விபரமாக
பக்ஷமுள்ள ஆசிரிய ராகுமுந்தன்
அன்பான திருவடியை நம்பினேன்யான்
அநுக்கிரகஞ் செய்தெனக்கு புகலுவீரே.

(இ-ள்) எனது குருநாதா தாங்கள் முன் சொன்ன விஷயமனைத்தும் நன்குணர்ந்தேன் ஆனல் உலகில் பிறந்த சில பெண்களுக்கு மணமாகாமல் வெகுகாலம் பொறுத்து மணமாவதும் சிலருக்கு மணமாகா மலிருப்பதுவும் சிலர் விபசாரியாயலைந்து மென்ன காரணத்தினுல் சிலருக்கு புசிப்பதற்கு அன்னமில்லாமல் அலைச்சல் படுவது மேன் இவையனைத்தும் எனக்கு விபரமாய்ப் புகலுவீர் குருநாதா.

குரு சொல்வது
எண்சீரடி விருத்தம்

உத்தமனே யென்சிஷ்யா விபரமாக
உரைத்திடுவேன் கவனிப்பாய் ருதுலக்னத்தின்
சத்தமத்தான் சுக்கிரனும் மறைந்திருக்க
சனி லக்னத்தனையே பார்த்தால் ராகுசேர்ந்து
எத்ததியுமணமில்லாத திருப்பாள் வாக்கை
எதிருற்றுரவிகுஜன் சனி ராகு பார்த்தால்
வித்தையில்லை புத்தியில்லை புசிப்பில்லாமல்
விடுகள் தோறுந் திரிந்துயாசிப்பானே

இ-ள் எனது அன்பான சிஷ்யா பெண்கள் ருதுவான இலக்கினத்தின் ஏழாவது ஸ்தானதிபதியும் களஸ்திர பதியாகிய சப்தம ஸ்தானதிபதியும் களஸ்திர

காரகனாகிய சுக்கிரனும் பகை நீசமாய் அஸ்தமன வக்கிரமாய் திரியசஷ்டாஷ்டம விரயஸ்தானங்களிலிருந்தால் ஜாதகிக்கு மணமாகாமலிருப்பதற்காகும். ஆனால் சனி, சூரியன், இராகு, செவ்வாயும் வாக்குஸ்தானத்தைப் பார்த்தால் ஜாதகிக்கு வித்தை புத்தி விவேகமில்லாமலும் அன்னபக்ஷணமகப்படாமலும் வீடுகள் தோறுந் திரிந்து யாசகமெடுத்துண்பவளாயிருப்பதற்காகும்.

ஆனால் சப்தஸ்தானாதிபதி மறைந்திருந்தால் சுக்கிரன் ஏழாமிடத்தில் உச்சமபெற்றிருந்தும வாக்குஸதானத்தை குருபார்த்தும புதனும் இலக்னத்திலிருநதால ஜாதகி வாசிப்புத் தன்மையில் தேர்ச்சி யடைந்து வித்யாசமர்த்தியாகவும் விவேகசாலியாகவு மிருப்பதுடன் மணமாகாதிருந்தாலும் பிரபுவை மநசித்து விபசாரியாயிருநது வெகு பொருள் சேகரித்து பொன் பொருள் பூஸ்திதியுடன் பொருந்தி ஜீவித்திருப்பதற்காகும்.

சீஷன் சொல்வது

எண்சீரடி விருத்தம்

சகலவித சாஸ்திரமுங் கற்றுணர்ந்து
சதுர்வேதமுணர்ந்த குருநாதாயிந்த
ஜெகமீது பெண்களுக்குப் புத்ரில்லர்
ஜென்மபரியந்தமும் மலடியென்று
இகத்திலுள்ளோர் புகல்வது
இவர்களுக்கெந்த கிரகத்தாலே சொல்வீர்
சுகமாக யெனக்கதனை விபரமாக
சொல்லுவீரென்குருவே பணிந்தேன் சுவாமி



இகத்திலுள்ளோர் புகல்வது மேனோசுவாமி
இவர்களுக்கெந்த கிரகத்தாலே சொல்வீர்
சுகமாக யெனக்கதனை விபரமாக
சொல்லுவீரென்குருவே பணிந்தேன்சுவாமி

(இ-ள்) சதுர்வேத சாஸ்திர ஆராய்ச்சியுடன் பல சாஸ்திர நூலுணர்ந்த என் குருநாதா உலகிலுள்ள பெண்களில் அநேகருக்கு புத்திரில்லாமல் மலடியாயிருக்கின்றார்களே அதன காரணம் எந்த கிரகங்களால் அவர்கள் புத்திர பாக்கியமில்லாத மலடா யிருக்கிறார்களோ அதன் விபரத்தை அடியேனுக்கு தெரியச் சொல்வீர் சுவாமி எ-று,

குரு சொல்வது

எண்சீரடி விருத்தம்

எஞ்சலிலாவென்சிஷ்யா யுந்தனுக்கு
எளிதினத யோதுகிறேன் விபரமாக
பஞ்சமத்தோன் குருமறைவு ஸ்தான முற்றால்
பலநாளும் புத்திரரில்லா மலடியாவார்
வஞ்சகமாய் முன் ஜென்மந்தனிலே செய்த
வல்வினையும் பழிபாப தோஷமென்று
வஞ்சியை தூஷிப்பார் மலடியென்று
வையகத்தின் மாந்தரெல்லா கவனிப்பாயே.

(இ-ள்) ஜாதகியின் ருதுகால வேளையின் உதய லக்கினத்திற்கு பஞ்சமஸ்தானாதிபதியும் புத்திரகாரனாகிய குருவும் பகை நீசஸ்தானத்தில் வக்கிரமாய் திரிதிய சஷ்டாஷ்டம் விரையஸ்தா

னங்களாகிய மறைவு ஸ்தானத்திலிருந்தால் அந்த ஜாதகிக்கு புத்திரி புத்திரரில்லாத மலடியாயிருப்பதற்காகும். எ-று

ஆனல் புத்திர ஸ்தானதிபதியும் குருவும் ரிஷபம் மிதுனம் கடகம் கன்னி துலாம் மகரம் கும்பங்களிலிருந்தால் கர்மபுத்திரனை பெருவிட்டாலும் புத்திரிகளைப் பெற்று அவர்களால் குடும்பம் விர்த்தியாகும் அன்றியும்.

வெண்பா

ஜன்சொன் பாவென்றில் அரவுசனிகுளிகன்
மிஞ்சவே நோக்க மிகவிருக்க—வஞ்சியரே
சர்ப்பதத்தைக் கொன்றதினல் சந்ததகேடாகு
விர்ப்பலதைசொன்னேம்விரைந்து [மென்று

(இ-ள்) பெண்கள் ருதுவான லக்கினத்திலாகிலும பஞ்சமஸ்தானம ஒன்பதா மிடங்களிலாகிலும இராகு சனி குளிகனுகிய மூன்று இரகங்களி லெவர்களிருந்தாலும அந்த ஜாதகிக்கு சர்ப்பதோஷமுண்டென்றும அதனல எத்தனை புத்திரி புத்திரர்கள் பிறந்தாலும் மரணமாய்க் கொண்டே யிருக்குமென்று ஜோதிட கணிதாராய்ச்சியிற் சிறந்த பெரியோர் சொல்வார்கள்.

ஆனல் மேற்குறிப்பித்தபடியே கிரகங்களிருந்தால அந்த ஜாதகிக்கு மணமான பின்பு புருஷனுடனே அரசமரம பிரதக்ஷணஞ் செய்து சர்ப்பபுத்துக்கு பால்வார்த்துசர்ப்பதோஷ விமோசனம் செய்தால பிறக்கும பிள்ளைகளெல்லாம் சுகஜீவியாயிருப்பதற்காகும்.

ஆனல் புத்திர ஸ்தானதிபதியும் புத்திரகாரனுகிய குருவும பெண்கள் ருதுவான உதயலக்கினத்திலேயே கிரகாபுத்கரனுகிய குருவும் புத்திர



ஸ்தானதிபதியாகிய கிரகமுமிருந்தால் ஜாதகிக்கு விசேஷ புத்திரபாக்கிய முண்டாயிருப்பதுடன் குடும்பரக்ஷகியாயிருப்பதற்காகும் இவையனைத்தும் அவரவர் முன் ஜனனத்தில் செய்த பாபபுண்ணியத்தை யனுசரித்துதான் துவாதச லக்கினங்களில்கிரகமிருந்த பலன் கொடுப்பார்கள்.

சிஷன் சொல்வது

எண்சீரடி விருத்தம்

துதிமேவுமென் குருவே ருதுகாலத்தில்
தோற்றும் மாதம்கிழமை இலக்கினங்கள்
திதிவார நக்ஷத்திர கரணயோகம்
துலங்குமந்த வேளையிலே யமையுமந்த
சதுரானபலாபலனை யெந்தனுக்கு
சரியாகச்சொல்லு வீரென்றுயானும்
மதிமிகுந்த குருவேரின் கமலபாத
மலரடியையான்மறவா துதிக்கிலேன்

இ-ள் சிஷ்யர்களால் துதிக்கும் திருவடியையுடைய குருநாதா பெண் ருதுவான மாதம், வாரம் நக்ஷத்திரம் கரணயோகத்தில் பலனையும் விபரமாய் எனக்கு சொல்லுவீர் குருநாதா.

குரு சொல்வது

எண்சீரடி விருத்தம்

அவ்விதமே சொல்லுகிறேன் சிஷ்யா கேட்பாய்
அவனிதனில் பெண்கள் ருதுவான மாதம்
ஒவ்விய கிழமை திதி நக்ஷத்திரயோகம்
ஓதுமந்தகரண பலனுந்தனுக்கு
அவ்வியமில்லாதுரைப்பேன்கவனித்தோர்ந்து

அவைகள் தரும் பலாபலனை சொல்லுகின்
செவ்வையாய்கேட்டுமனமகிழ்ந்துநீயும் [றேன்
ஜெகத்தோர்க்கு பலன் சொல்வாய் மதிக்கத்
[தானே

(இ-ள்) அறிவிற்சிறந்த சிஷ்யாஉலகத்தின் பெண்கள் ருதுவான மாதம், வாரம், திதி நக்ஷத்திரம் கரணயோக பலனையெல்லாம் விபரமாய்ச் சொல்லுகின்றேன், கவனமாய் கவனித்து உலகிலுள்ள மனிதர்களுக்கு பலனை சொல்வாய். எ-று

குரு சொல்வது
மாதபலன் விபரம்
எண்சீரடி விருத்தம்

சித்திரையில் புருஷனுக்கு ஆகாதப்பா
சுகமடைவாள் வைகாசிமாதமானல்
புத்ரசம்பத்தாயிருப்பாள் ஆனிமாதம்
புருஷரெலாமிச்சிப்பாள் ஆடிமாதம்
புத்தியுடன் வித்தை புத்தி மிகவுண்டாகும்
புரட்டாதி மாதத்தில்ருதுவான தாலே
அத்ததி ஐப்பசியில்ருதுவானல்புத்ரர் [பாரே
அநேகருண்டாம் அமங்கலியாய் தவிப்பாள்

(இ-ள்) சித்திரை மாதத்தில் ருதுவான பெண்ணுக்கு களஸ்திரஸ்தானத்தை சனிபார்த்தால் மணளன் வியாதியஸ்தனை யிருப்பதற்காகும் ஆனல் செவ்வாய் தோஷமிருந்தால் ஜாதகியின் புருஷன் மரணமாய் மாங்கல்ய மிழந்து விதவையா யிருப்பதற்காகும், வைகாசி மாதம ருதுவான பெண்ணுக்கு உதயலக்கினத்தில் புதனும் சப்தமஸ்தானத்தில் சுக்கிரனு மிருந்தால் ஜாதகி சுக சவுக்கியமாய் பொன் பொருள் பூஸ்திதியுடனிருப்பதற்காகும். ஆடிமாதத்தில் ருதுவான பெண்ணுக்கு சுக்கிரனும் சந்திரனும் சப்தமஸ்தானத்திலிருந்தால் அந்த ஜாதகி பல புருஷரை இச்சிக்கும் மையலுற்றவளா யிருப்பதற்காகும். ஆனிமாதத்தில்ருதுவான பெண்களுக்கு புத்திரஸ்தானதிபதி ஆக்ஷியாயிருப்பதுடன் குருவும ஒன்பதிலிருந்தால் வெகுபுத்திரரைப்பெற்று குடும்ப ரக்ஷகியா யிருப்பதற்காகும் புரட்டாசி மாதத்தில் ருதுவான பெண்களுக்கு புதன் லக்கினத்திலும் குரு கடகத்திலு மிருந்தால் ஜாதகி ஆசார அனுஷ்டானத்துடன் வித்தை புத்தி பொன் பொருள் பூஸ்திதியோடிருப்பதற்காகும் ஐப்பசிமாதத்தில் ருதுவான பெண்களுக்குஉதய லக்கினத்திற்கு ஐந்தாமிடத்தில் சனி சுக்கிரன் சந்திரனுமிருந்தால் ஜாதகி வெகுபுத்திரர் புத்திரிகளைப் பெற்று குடும்பரக்ஷகியா யிருப்பதற்காகும். செவ்வாய் தோஷமிருந்தால் மணளனை இழந்து விதவையாயிருப்பதற்காகும். எ-று,



பன்னுமந்த கார்த்திகையில் ருதுவானலே
பலரையும் தூஷித்து பகையாயிருப்பாள்
நன்னயமாய் மார்கழியில் ருதுவானலே
நற்குண புத்திரர்களைப் பெற்று வாழ்வாள்
தன்மையுடன் தைமாதம் ருதுவானலே
தானதர்ம புண்ணியங்கள் செய்குவாளே
மன்னு மாசி பங்குனியில் ருதுவானலே
மக்களுடன் தனவதியாயிருப்பாளே

(இ-ள்) கார்த்திகை மாதத்தில் ருதுவான பெண்களுக்கு இலக்கினத்தில் இராகு உச்சம் பெற்றும் இரண்டாமிடத்தில் சூரியனும் சனியு

மிருந்தால் ஜாதகி மனோகர்வமாய் பலரையும் இகழ்ந்துபேசி வீண்கலகம் செய்து சகலருக்கும் பகையா யிருப்பதற்காகும். மார்கழி மாதத்தில் ருதுவான பெண்களுக்கு உத்தம குணமமைந்த புத்திரர்கள் பிறந்து தனவந்தரா யிருப்பதற்காகும். தைமாதத்தில் ருதுவானபெண்கள் ஆசார அனுஷ்டானத்துடன் பகவத் பக்தியானந்தமாய் தான தர்மங்கள் புண்ணியஞ் செய்திருப்பதற்காகும். மாசி மாதத்தில் ருதுவான பெண்களுக்கு இலக்கினத்தில் சனியும் இரண்டில் குருவும் ஒன்பதில் சுக்கிரனுமிருந்தால் தனதான்ய சம்பத்துடனிருப்பதற்காகும் பங்குனி மாதத்தில் ருதுவான பெண்களுக்கு வெகு புத்திரபாக்கிய முண்டாகும். எ-று.

ருதுவாகும் கிழமைகளின் விபரம்

எண்சீரடி விருத்தம்

தினகரனில் ருதுவானல் வியாதியுண்டு
திங்கள்தனில் பதிவிரதையா யிருப்பாள்
குணமில்லா செவ்வாய்க்கு இடுக்கணுண்டு
குருவாரம் பாக்கியவதியா யிருப்பாள்
தனஞ்சேரும் சுக்கிரனில் பதிவிரதையாவாள்
தரணியிலே சனிவிபத்தை யடைவாளென்று
மனம்போலே பெரியோர்சொன்ன வாக்யம்
மாகஷிமையாய்ப் புகலுவேன் கவனிப்பாயே

(இ-ள்) அன்பான சிஷ்யனே முன்னம் பெண்கள் ருதுவான நாழிகை கணக்கெடுத்து இலக்கினம் நிச்சயம் செய்து இன்னின்ன லக்கினத்தில் ருதுவானல் இன்னின்ன பலன் நடக்குமென்றுரைத்தேன் அதன்பிறகு அந்தந்தமாதங்களில் ருதுவாகும் பெண்களுக்கு இன்னின்ன பலன் நடக்குமென்று சொன்னேம் இப்போது சப்த வாரங்களாகிய ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனியென்னும் ஏழுவாரங்களில் எந்தெந்த வாரத்தில் ருதுவாகின்ருர்களோ அந்தந்த வாரத்தின் பலாபலனை சொல்லுகிறேன் கவனிப்பாய், பெண்கள் ருதுவான தினம் ஞாயிற்றுக் கிழமையாயிருந்தால் சதாகாலமும் வியாதியா யிருப்பதற்காகும், திங்களானல பதிவிரதையாயிருப்பதற்காகும் செவ்வாய்க்கிழமையில் ருதுவானல் துன்பமும் துயரமுண்டாயிருக்கும். புதன் கிழமையில் ருதுவானல் புத்திர பாக்கியங்களும் பொன் பொருள் பூஸ்திதியுமுண்டாயிருக்கும, வியாழக்கிழமை ருதுவாகில் பாக்கியவதியாய் இருப்பதற்காகும், வெள்ளிக்கிழமையில் ருதுவானல் ஆசார அனுஷ்டானத்துடன் பதிபக்தியா யிருப்பதற்காகும் சனிக்கிழமையில் ருதுவானல் தரித்திரவதியாய் சதாகாலமும் துன்பமும் துயரமுமடைந்தவளா யிருப்பதற்காகும், எ-று.



குரு சொல்வது

திதிபலாபலன் விபரம்

எண்சீரடி விருத்தம்

அன்புடைய சிஷ்யா திதிபதினைந்தாகும்
அவைகளிலே வளர்பிறைகளென்றும்
பன்னுமந்த திதிகளிலே ருதுவானலே
பலாபலனை சொல்லுகின்றேன் விபரமாக
நன்மையாய்க் கேட்டிடுவாய் பலன்களெல்
[லாம்
நடக்கின்ற விபரத்தை கவனித்தோர்ந்து

மன்னு சுகதுக்கமெலா மவரவர்க்கு
வரும் பலனை கவனிப்பாய் சிஷ்யா நீயே

(இ-ள்) எனது அன்பான சிஷ்யா ஒவ்வொரு மாதத்திலும் வருகின்ற திதிகள் பதினைந்து ஆகும், இவற்றுள் வளர்பிறை யென்பது அமாவாசையின் மறுதினத்திலிருந்து பிரதமை துதியை திரிதியை சதுர்த்தி பஞ்சமி சஷ்டி சப்தமி, அஷ்டமி, நவமி, ஏகாதசி, துவாதசி திரயோதசி, சதுர்த்தசி, அமாவாசை யென்றும் அதன்பின் வரும் திதிகளும் மேற் குறிப்பித்தபடியே விதமே பிரதமை முதலாக எண்ணிக்கொண்டு வரும்போது அதிலிருந்து பதினைந்தாவது திதி பௌர்ணமியாகும், ஆகையால் இந்த திதிகளில் ருதுவாகும் பெண்களின் பலாபலனைச் சொல்வேன் கவனிப்பாய் அதெவ்விதமெனில்:-

பிரதமையில் பெண்கள் ருதுவானால் துர்க்குணமுடைய பாபியாயிருப்பாள், துதியை திதியில் ருதுவானால் தனவான்யை சம்பத்துடைய பாக்கியவதியாயிருப்பதற்காகும் திரிதிய திதியில் ருதுவானால் புத்திர சம்பத்துடைய குடும்பரக்ஷகியா யிருப்பதற்காகும், பஞ்சமி திதியில் ருதுவானால் நற்குணம் பொருந்தியவளாய் பல வித நன்மையா யிருப்பதற்காகும் சஷ்டியில் ருதுவானால் வாயாடித்தனமாகவும் சண்டை சச்சரவும் செய்துக்கொண்டிருப்பதற்காகும் சப்தமி திதியில் ருதுவானால் புத்திரபாக்கியங்களுடனே தனவதியாயிருப்பதற்காகும் அஷ்டமியில் ருதுவானால் கோபம் குரோதமமைந்த குரூர இராக்ஷசியைப் போலிருப்பதற்காகும் நவமி திதியில் ருதுவானால் சதாகாலமும் துக்கமும் துயரமும் பொருந்தியவளாய் விசனத்துடன் விசனமாயி யிருப்பதற்காகும் தசமி திதியில் ருதுவானால் புத்திர பாக்கியத்துடன் விசேஷ சுகசவுக்கியமாயிருப்பதற்காகும். ஏகாதசி திதியில் ருதுவானால் ஆசார அனுஷ்டானத்துடன் கசிகரமாயிருப்பதற்காகும், துவாதசி திதியில் ருதுவானால் கோபமும் குரோத குணமாய் சகலரையும் அனுஷித்திகழுந் தன்மையா யிருப்பதற்காகும் திரியோதசி திதியில் ருதுவானால் அழகானந்தமுக வஜீகர மாயிருப்பதற்காகும், வளர்பிறை பதினைந்தாவதுதிதியாகிய பௌர்ணமியில் ருதுவானால் அயல்வீடுகள் தோறும் போய் வாயாடி தனமாய்பேசிக் கொண்டிருப்பதற்காகும் தேய்பிறையின் பதினைந்தாவது திதியாகிய அமாவாசையில் ருதுவானால் சதாகாலமும் வறுமையும் துன்பமும் அனுபவித்துக் கொண்டிருப்பதற்காகும்.



நக்ஷத்திரபலன் விபரம்

சந்தவிருத்தம்

உத்திராட மாதியாறு மாறுமுத்தமம்
பித்தனர் பிறந்தநாளு மற்றயேழுமத்திபம்
அத்தமோடு சித்திரை அனந்தவாழ்வுகுன்றிடும்
மற்ற ஆறு நன்னிலை மங்கை நூலிழப்பாளே

(இ-ள்) உத்திராடத்திலிருந்து மிருக சீரிடமாகிய பன்னிரெண்டு ராசிகளில் பெண்கள்ருதுவானால் மிகவும் உத்தமமான தென்றும் திருவாதிரை நக்ஷத்திரத்திலும் சித்திரை நக்ஷத்திரத்திலும் ருதுவானால் இந்த ஜாதகியின் வாழ்வு குறைந்து வறுமை நோயினால் கலங்க செய்யும் சுவாதி நக்ஷத்திரத்திலிருந்து பூராட நக்ஷத்திரம்

வரைக்கும் ருதுவானால் அதம்பல மென்றும் முன்னோர்கள் கூறியிருக்கின்றார்கள்.

இன்னின்ன நக்ஷத்திரங்களில் ருதுவானலும் அந்தந்த சமயங்களில் நடக்கும் திதியையும் அனுசரித்து துவாதச இராசியிலிருக்கும் கிரக பலனையும பார்த்து பலாபலன் சொல்ல வேண்டும்.

இவ்விதமாய் நடக்கும் 60-வது நாழிகையில் தோற்றும இராசியிலமைந்த கிரகங்களின் விபரத்தை ஆராய்ச்சி செய்து பார்த்தால அவைகளில் ஒன்பது கிரகங்களும் இன்னின்ன விதமா யிருக்கிறதே அதை ஆராய்ந்துணர்ந்து பலன் சொல்லவேண்டும்,

| | | | |
|---|---|---|---|
| மீனம் 4—½ உபயராசி | மேஷம் 4—½ சரராசி | ரிஷபம் 4—45 ஸ்திரராசி | மிதுனம் 5—½ உபயராசி |
| கும்பம் 4—45 ஸ்திராசி | ஓர் நாளைக்கு 60 நாழிகை இரவிலும் பகலுமாய் நடக்கும். | | கடகம் 5 அரை சரராசி |
| மகரம் 5—½ சர ராசி | மேற்குறித்த 12 இராசியில் ருதுவான உதயராசி இலக்னமாகும் | | சிங்கம் 5—½ ஸ்திரராசி |
| தனுசு 5 அரை உபயராசி | விருச்சிகம் 5—½ ஸ்திரராசி | துலாம் 5 சரராசி | கன்னி 5 உபயராசி |

சீஷன் சொல்வது
எண்சீரடி விருத்தம்

குருநாதா நவக்கிரகமொன்பது பேரானோர்
கூறுமந்த பனிரெண்டு லக்கினத்தில்
இருக்கின்ற காலத்தே யெந்தனுக்கு
இனிதுடனே விபரமாய்ப் புகலவேணும்



கருணையுள்ள உமது சமுகத்தில் வந்து
காசினியின் ஜாதகரின் பலனுணர்ந்தேன்
தருணமே யான்கேட்ட விஷயந்தன்னை
சந்தேகமறவினிதாய் புகலுவீரே

(இ-ள்) குருநாதா! தாங்கள் புகன்றவிஷயமனைத்தும் யான் விபரமாய்க் கற்றுணர்ந்தேன் ஆனல் அடியேன் மனதிலோர் சந்தேக மிருக்கிறது. அதனை அன்புடனே சொல்வீரென வேண்டினேன். அதென்னவெனில் இராசிபனிரெண்டிலும் நவக்கிரங்களாகி சூரியன், சந்திரன், செவ்வாய் புதன், வியாழன், சுக்கிரன், சனி, இராகு, கேது முதலானோர் எவ்வளவு காலம் வரையில் ஒவ்வொரு ராசிகளிலிருக்கின்றார்களோ அதை விபரமாய் புகலுவீர், எ-று.

குரு சொல்வது
விருத்தம்

அன்புடனுந்தனுக்கு அறிவிக்கும்ஜோதிடத்தை
நன்மையாய் கவனித்தோர்ந்து நடக்கின்ற
[பலனை யெல்லாம்
இன்புடன் கவனித்திந்த இராசியில் நக்ஷத்திரங்
[கள்
தன்மையாயிருக்கு முண்மைதனை முனம்கவனிப்
[பாயே

இ-ள் என் அன்பிற்கிசைந்த மாணவா நீ கேட்ட கேள்விசரிதான் ஆனல் முதலாவது இருபத்தேழு நக்ஷத்திரங்களும பன்னிரெண்டு ராசியிலமைந்திருப்பதை புகல்வேன், அதனைக் கவனித்துணர்ந்தாயானல் அதன்பிறகு ஒவ்வொரு ராசியிலும் நவக்கிரகங்களாகிய ஒன்பதுபேரும் இருக்கும் காலளவை புகலுவேன் கவனிப்பாய் அதெவ்விதமெனில்:—

ஆராய்ந்து நன்குணமும் போதிருக்கும்
நீதமுள்ள யோகங்கள் இருபத்தேழில்
நிலைத்ததின் யோகத்தின் பலனாய்ந்து
ஜாதகிக்குற்றிடும் பலனை சொல்வாயானால்
சரியாகத்தானிருக்கும் கவனிப்பாயே

இ-ன் உலகத்தில் பிறந்த பெண்கள் ருதுவான தினத்தில் எந்த யோகங்கள் வருகிறதோ அந்த யோகத்தின் படியா தான் பலனமையும் அதெவ்விதமெனின் விஷகம் யோகத்தில் ருதுவான பெண் சதாகாலமும் விசனமாயிருப்பதற்காகும் பிரீதியோகத்தில் சதாகாலமும் சந்தோஷமாயிருப்பதற்காகும், ஆயிஷ்மான யோகத்தில் ருதுவானல் ஜாதகி தீர்க்காயுசாயிருப்பதற்காகும், சௌபாக்கிய யோகத்தில் ருதுவானஜாதகி தன தான்ய சம்பத்துடனிருப்பதற்காகும் சோபான திதியில் ருதுவான ஜாதகி சுபமங்களகரமாயிருப்பதற்காகும், அதிகண்டயோகத்தில் ருதுவானல் துர்க்குண மமைந்த பாவியாயிருப்பதற்காகும், சுகர்மயோகத்தில் ருதுவானல் சுகஜீவியா யிருப்பதற்காகும், திரிதிய யோகத்தில் ருதுவானல் ஜாதகி மனதைரியமா யிருப்பதற்காகும். சூலயோகத்தில் ருதுவானல் ஜாதகி துர்மரணமாவாள் கண்டயோகத்தில் ருதுவானல் துர்க்குணமமைந்த பாவியாயிருப்பாள், விக்ருதியோகத்தில் ருதுவானல் பலவித நன்மையடைந்து சுகமாயிருப்பதற்காகும் விப்ருதியோகத்தில் ஓர்பெண் ருதுவானல் பலவித நன்மையும் சாந்தமனதமைந்தவளா யிருப்பதற்காகும் துருவயோகத்தில் ருதுவான பெண் மனளனுக்கினிய பதிவிரதையாயிருப்பதற்காகும் வியாகத் யோகத்தில் ருதுவானவள் அமங்கலையா யிருப்பதற்காகும், அரிஷணயோகத்தில் நற்குணம்



பொருந்தியவளா யிருப்பதற்காகும், வச்சிர யோகத்தில் ருதுவானல்சுந்தர சொரூபமாயிருப்பதற்காகும், சத்தியோகத்தில் பலவித நன்மையும் சம்பத்துடையவளாயிருப்பதற்காகும் விதிபாதயோகத்தில் ருதுவானல் கொடியவிசமாயிருப்பதற்காகும், வரியனயோகத்தில் ருதுவானல் தர்மசிந்தையா யிருப்பதற்காகும், பரிக யோகத்தில் ருதுவானல் பந்துக்களுக்குப் பகையாயிருப்பதற்காகும்.

இவ்விதமா யமைந்திருப்பதுடன் சிவயோகத்தில் ருதுவானல்உத்தமியாயிருப்பதற்காகும் சித்தயோகத்தில ருதுவானல் தனவதியாயிருப்பதற்காகும் சாத்யயோகத்தில் ருதுவானல் போகபாக்யமுடையவளாயிருப்பதற்காகும் சுபயோகத்தில் ருதுவானல் மனசந்தோஷமாயிருப்பதற்காகும்.

ப்ரமயோகத்தில் ருதுவானபெண் கீர்த்தியாயிருப்பதற்காகும், பிரம்மயோகத்தில் ருதுவானல் பலவித துர்குணமமைந்தவளா யிருப்பதற்காகும். மாகேந்திர யோகத்தில் ருதுவானல் வியாதியாயிருப்பதற்காகும். வைதிருதியோகத்தில் ருதுவான பெண் ஜீவகாருண்யமில்லாமல் கொலை செய்பவளா யிருப்பதற்காகும்.

எண்சீரடி விருத்தம்

இத்தரணிதனில் ருதுவான பெண்கள்
இருபத்தேழ் யோகம்திலெதி லானலும்
சித்தமகிழ்வாயானல் அவற்றிற்கேற்ற
சிறுமையும் பெருமையும் அடைவாரென்று
சுத்தமாய் முன்னுரைத்தோம்கவனித் தின்னும்
சொல்லுகின்ற காரணம் பதினென்றிற்
கேற்ப

இத்தகியே பலனுரைப்போம் ருதுவானோர்க்கு
இனிதான பலனுரைப்போம் கவனிப்பீரே

இ-ள் உலகில் வசித்துளாவும் கன்னிகை தனது வாலிப திசையில் ருதுவான யோகங்கள் 27-க்கும் அனுபவிக்கும் படியான பலா பலனை முன்பு சொன்னோம் ஆனால் அவற்றில் சுபயோகங்களாயிருந்தால் நன்மையா யிருக்கும்படி சுபத்தைக் கொடுப்பார்கள், அசுபயோகத்தில் ருதுவானால் துர்பலனையே யனுபவிப்பார்கள் ஆகையால் அவற்றிற்கிசைந்த சாந்தி செய்து சுகத்தை யனுபவிப்பதே நலமாகும். இனி காரணங்கள் 11-க்கும் பலன் சொல்வோம் கவனிப்பீர்கள் எ-று.

உலகில் பிறந்த கன்னியர்களில் பலகரணத்தில் ருதுவானால் சுகசவுக்கியமாயிருப்பதற்காகும் பாலவகரணத்தில் ருதுவானால் மனளனுடனே மங்களகரமாயிருப்பார்கள் கௌலகரணத்தில் ருதுவானால் அழகலங்காரமாயிருப்பதற்காகும் தைதுலையில் ருதுவானால் ஆசாபாசமாயிருப்பதற்காகும் கரசை கரணத்தில் ருதுவானால் அமங்கலையாயிருப்பதற்காகும். வணிசலாகரணத்தில ருதுவானல் கொடுக்கல் வாங்கலுடையவளாயிருப்பதற்காகும். பத்திரை யோகத்தில் ருதுவானால் நன்மையடைவதற்காகும், சகுனி கரணத்தில் ருதுவானால் தகாத நடக்கையுடையவளா யிருப்பதற்காகும், சதுஷ்பாதத்தில் ருதுவானால் சந்தோஷமில்லாதவளா யிருப்பதற்காகும், நாகவ கரணத்தில் ருதுவானால் வறுமையாற் கலங்குந் தன்மையா யிருப்பதற்காகும்.

மேற் சொன்ன விதமே அமைந்த பலன்களில் சிற்சிலர் அசுபபலனை அனுபவிப்பதாயிருந்தால் அந்தந்த திதிவார நக்ஷத்திர பலனையும் ஆராய்ந்துரைத்தல் வேண்டும்.



## பெண்கள் ருதுவான ஸ்தான பலன் விபரம்
### என் சீரடி விருத்தம்

கன்னிகைகள் ருதுவான ஸ்தானந்தன்னை
கண்டறிந்து பலன்தனை சொல்லும்போது
நன்மையுறும் ஸ்தானத்தி லானாரானால்
நல்லபலன் தானடக்கும் நங்கையர்க்கு
இன்னலுண்டு துன்பமுறும் ஸ்தானமானால்
இவையெல்லாம் ஆலோசித்துவாவர்க்கு
பன்னுவாய் பலனெல்லாம் விபரமாக
பார்மிசையின் ஜாதகத்தை பார்த்தாராய்
(ந்தே

(இ-ள்) உலகத்தில் பிறந்த கன்னியர்கள் எந்தெந்த ஸ்தானத்தில் ருதுவாகின்றார்களோ அவையனைத்துங் கவனித்துப் பார்த்து நல்ல ஸ்தானங்களிலானால் நல்லபலனையே அனுபவிப்பதற்காகும் துர்ஸ்தானத்திலானால் துன்பமேயுண்டாகும், ஆனால் அந்த ஜாதகிகளின் ஜாதக பலனையும் ஆராய்ந்து பலன் சொல்ல வேண்டும்.

அதெவ்விதமெனில் வீட்டுக்கு வெளியிலானால் விபசாரியா யிருப்பதற்காகும். பசுந்தொழுவத்திலானால் பதிவிரதையாயிருப்பதற்காகும், மனவருத்த போதானால் நிர்வாணமாயிருக்கும் ஜலக்கரையில் முடையவளா யிருப்பதற்காகும் ஆடை விர்த்தியாகும் ருதுவானால் ஜாதகிக்கு திரவிய சம்பத்துண்டு கிராம தோட்டத்திலானால் ஜாதகி மமத்தியில் போகும்போது ருதுவானால் விபசாரியா யிருப்பதற்காகும்.

ஆனால் அயல் வீட்டிலிருக்கும்போது ருதுவானால் துர்நடத்தை யுடையவளா யிருப்பதற்காகும், அது வீட்டிலேயே ருதுவானால் ஆசார அனுஷ்டான நல்லொழுக்க முடையவளாயிருப்பதற்காகும். ஆலயங்களிலானால் ஜாதகி மகா சமர்த்தியா யிருப்பதற்காகும். பெண்களின் மத்தியில் உத்தமபுருஷனை மணம் புரிந்து சுகஜீவியாயிருப்பதற்காகும், சயனித்திருக்கும் போது ருதுவானால் ஜாதகி தனது தகப்பனை இழப்பதற்காகும். நின்றிருக்கும் போது ருதுவானால் பசு பாக்கிய புத்திர சம்பத்துடன் வாழ்ந்திருப்பதற்காகும் அன்னம் புசிக்கையில் ருதுவானால் ஜாதகிக்கும் பலவித நன்மையுண்டாகும், அலங்காரஞ் செய்யும் போதானால் வெகு திரவியம் சேகரஞ் செய்து தனவதியா யிருப்பதற்காகும், கொல்லையிலாகில் மண்மனை வயல் காணி ஆக்ஷியால் உண்டாகும்.

ருதுகாலத்தின் பார்வைபலன்

தன்னைத்தானே பார்க்கில் துக்கமுண்டு
தனக்கிளைய கன்னி கண்டால் புண்ய
[முண்டு
பன்னும் கைம்பெண்கண்டால் விதவை
[யாகும்
பாரில் நோயாளிக் கண்டால் பிணியதி
[கரிக்கும்
நன்மைபெறும் வேசிகண்டால் போக
[பாக்யம்
நவில்மாங்கல்யஸ்திரீ கண்டால் சுமங்கி
[லியாகும்
தன்புருஷன் பார்த்தாலே துக்கமுண்டு
தரித்திரமாம் வெள்ளாட்டி கண்டிட்
[டாலே



(இ-ள்) ஓர் கன்னிகை துவாலிப திசையில் ருதுவாகும் போது தானே பார்த்தால் துன்பமுண்டாகும், தனக்கு இளைய கன்னியா ஸ்திரீகள் பார்த்தால் புண்ணியவதியா யிருப்பதற்காகும் கைம்பெண்கள் பார்த்தால் விதவையாயிருப்பதற்காகும், ருதுவானதை வியாதியஸ்தர் கண்டால் பிணியாயிருப்பதற்காகும், வேசிகள் பார்த்தால் போக பாக்யவதியா யிருப்பதற்காகும், மங்கிலியஸ்திரிகள் பார்த்தால் ஜாதகி சுமங்கலியஸ்திரீயாகவே இருப்பதற்காகும், தனது மணாளனே கண்டால் துன்பமுண்டாகும். வெள்ளாட்டி பார்த்தால் தரித்திரியாகவே இருப்பதற்காகும். எ-று.

பெண்கள் ருதுவான காலபலாபலன்

அதிகாலையில் ருதுவானால் சுபமேயாகும்
அன்பாய் முற்பகலானால் தீர்த்தயாத்தி
[ரை
நிதமிகும் மத்யானத்தில் புத்ரபாக்யமுண்டு
நினைத்த பிற்பகலானால் சோரத்வமாவாள்
மதிமிகும் அந்திமாலை புத்ரருண்டு
மன்னும் அஸ்தமானத்தில் வேசையா
[வாள்
பதிதனிலுள்ளோரிதனை கவனித்தன்பாய்
பலாபலனை ஆராய்ந்து பலன் சொல்
[வாரே

(இ-ள்) உலகில் ஜனனமான பெண்கள் வளர்ந்து ருதுவாகும் சமயம் காலைவேளையாயிருந்தால் சுபகரமாயிருக்கும். முற்பகலானால் ஜாதகி தீர்த்தயாத்திரை செய்வதாயிருக்கும் மத்தியான வேளையானால் புத்திரசம்பத்துடையவளாயிருப்பதற்காகும், பிற்பகலானால் விபசாரியாயிருப்பதற்காகும், அந்திப்பொழுதா யிருந்

தால் விஷேசமாய் புத்திர பாக்கிய முண்டா யிருக்கும் சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில் ருதுவானால் அந்த ஜாதகி பலபேரை இச்சிக்கும் வேசையாளென்று உரைக்கப்படு மென்பதை கவனித்து சொல்லவும். எ-று.

கன்னிப்பெண் ருதுவாகும் காலந்தானே
கணித்தன்பாய் பார்த்து பலன் சொல்வ
[தென்றால்
முன்னிரவில் தீர்க்காயுளுடனிருப்பாள்
மூண்டதோர் பலன் சொல்வேன் கவனிப்
[பாயே
வின்னமாய் நடுராத்திரிதனில் ருதுவானாலே
விதவை யாளென்று விளம்புவாயே
பின்னிரவில் ருதுவானால் சுகமிராது
பிழையாம் சந்திகளானால் பாக்கியமில்லா
[தானே

(இ-ள்) ஓர் பெண் ருதுவாகும் காலத்தை கவனித்து பலன் சொல்வதென்றால் அதன்விபர மெவ்விதமெனில், முன்னிரவானால் தீர்க்காயுளா யிருப்பதற்காகும், நடு ராத்திரியா யிருந்தால் அந்த ஜாதகி விதவையாவாள் அன்றியும் பின்னிரவில் ருதுவானால் ஜாதகிக்கு சுகமிராது சந்தி வேளையில் ருதுவானால் பாக்கியமில்லாமல் பரதவிப்பதற்காகும் மென்று கணிதநூலோரைத்த வாக்கியமாகும் எ-று.

இன்னின்ன விதமாக கணிந்து பார்த்து
இராசி லக்கின கணிததிதி வாரயோகம்
பண்ணுமந்த நக்ஷத்திர நாழிகையும் பார்த்து
பகரு நவக்கிரகங்கள் பலனைக்கண்டு
நன்மையாய் பலாபலனை சொல்லும் போது
நாடியதோர் மணவாளன் ஜாதகமும்
[பார்த்து
அன்பாகமணம் செய்தால் புத்ரபாக்கியத்
[தோடு
அவனியிலே வாழ்ந்திருப்பீர் கவனிப்பீரே

(இ-ள்) பெண்கள் ருதுவான வேளையின் இலக்கின கணிதமெடுத்து துவாதச ராசிலிருக்கும் நவக்கிரகங்கள் கொடுக்கும் பலனையும் அனுசரித்து அந்த பெண்கள் ருதுவாகும் வேளையின் திதி, நக்ஷத்திர கரணயோக பலன்களும் விபரமாய் பார்த்து மணஞ்செய்துகொள்ளும் மணாளனுடைய ஜாதகபலனும் சரியாயமைந்திருந்தாலிவர்கள் தம்பதி உடலுயிராய் தனதான்யம் பசு புத்ரலாபத்துடனே வாழ்ந்திருப்பதற்காகும்

## ஏழுதினங்களின் ருதுவான பலன்

ஆதிவாரம்-இவளுக்குபுத்திரரில்லையென்பது சாஸ்திரங்களின் கருத்து ஆயினும் ஞாயிற்றுக்கிழமைகளில் பிறந்தவளும் அற்பபுத்திரர்களையுடையவளும் ஜெனம சூரியனாகில் அற்பபுத்திரருடையவளும் எனவுங் கொள்க. 1

சோமவாரம்-எக்காலத்தும் நீங்காத சந்தோஷ முடையவளும் சுமங்கலி, தன் பர்த்தா குடும்பமானது நாளுக்கு நாள் சந்திரகலைபோல் வளரும், ஆயுத பூஷண சம்பத்துடையவள்

மங்களவாரம்-சீக்கிரம் சந்தோஷி, அற்ப மாங்கலியம் உடையவளும் இடபேதகவாசி சிற்றின்ப இச்சையுடையவளும் நாணுவிதசந்தோஷி

புதவாரம்-சகல சௌக்கியமும் உடையவளும் அநேக புத்திரர்களைப் பெற்றிழப்பவளும்

ஆபரணம் பூஷணம் பலவற்றை யுடையவளும் பந்து சுகமுடையவள். 4

குருவாரம்-நன் நடத்தை நல்லொழுக்கம் முதலியன உடையவளும் தீர்க்க ஆலோசி சன் மார்க்க முடையவளும் குரு விஸ்வாசமும் தெய் வபக்தியும் உடையவள். 5

சுக்கிரவாரம்-எல்லாவித சம்பத்தும் உடை யவளும் சகலசாஸ்திரங்களையும் கற்பவளும் பல கலை ஆராய்ச்சி யுடையவளும் நன்மை செய்ய முற்படுவாளென்றுங் கூறுவதோடு மகாபதி விரதை என்றுங் கூறுவா, 6

சனிவாரம் . சிறுகுடையவளும் சிலாக்கிய மில்லாதவளும் நன்கொடை யில்லாதவளும் மைந்தர்களைப்பெற்று இழப்பவளும் க்ஷீணதேகி பல கஷ்டமும் தொல்லையும் உடையவளும் என்றுங் கூறுவர். 7

பெண்கள் அடியிற்கண்ட 7-நாட்களில்எந்த நாட்களில் விருப்பமோ அன்று காலையும் மாலை யும். 'ஓம் அம்மா மகாதேவி, சச்சிதானந்தி, சம் ப்வி, திரிசூலி, நீலகண்டாயி, திருநேத்திரிடம்பர வைரவி, இராஜராஜேஸ்வரி அடியாளுக்குவந்த ஆபத்துகளைத் திரும் அம்மணி மநோன்மணி' 'என்று துதி செய்வார்களாயின் அவர்களுக் குண்டாகும் சகல தோஷங்களும் சகல கஷ்டங் களும் சூரியனைக்கண்டு பனிபோல் நீங்கிவிடும்.

விரத நாட்களின் பலன்

எந்த ஸ்திரீகளும்:-

ஞாயிறு-விரதமிருக்கில் சிவபிரான் கடாக்ஷ மும் சகல துன்ப நிவர்த்தியும், தனது இன்னல் நீங்கி இன்பமும் உண்டாகும்.



திங்கள்-விரதமிருக்கில் லக்ஷ்மிகடாக்ஷமும் கோரிய காரிய சித்தியும் நீங்காத வாழ்வும் அன்ன வஸ்திரவிருத்தியும், சகல ஜனங்களின் உதவியும் பெரியோர்களின் நட்பும் உண்டாகும்.

செவ்வாய்-விரதமிருக்கின் சத்துரு ஜெய மும், பெரியோர்கள் நேயம், சந்தோஷம் நல் வரவு நல்லோர் உதவி முதலியன உண்டாகும்.

புதன்-விரதமிருக்கின் சகல செளக்கியங் களும் தொழில் விருத்தி பலவித காரியானு கூலம் நல்லோர் நேயம் முதலியன உண்டாகும்.

வியாழன்-விரதமிருக்கின் தான் கோரிய தெய்வ அனுகூலமும், சகல செளக்கியமும் கௌரவிருத்தியும் பொன் விருத்தியும் உண்டா கும்.

வெள்ளி-விரதமிருக்கின் லக்ஷ்மி விலாச மும் பர்த்தாவின் சுகமும் எவ்விதமான துன்பங் களுண்டாயினும் பனிபோல் நீங்குதலுமாம்.

சனி-விரதமிருக்கில் பலவித சம்பத்தும், நீங்காத செல்வமும் பந்துக்கள் வரவும் வியாதி நிவர்த்தியும் தனதானிய சேர்க்கையும் மங்கள விலாசமும் உண்டாகும்.

பவபந்த சாகரத்தை கடந்தெப்போதும்
பகவானை துணையெனவே மனதில் எண்ணி
தவஞ்செய்யும் ரிஷிகள் முனிசித்தர் வாழி
தாரணி ஜோதிஷர்களெல்லாம் வாழி
நவக்கோடி சித்தர்களின் பாதம் வாழி
நாதாக்கள் திருவடி யென்னுளும் வாழி
கவனமாய் ஜோதிஷத்தை கற்றோர்கேட்டோர்
காசினியிலெந்நாளும் வாழி வாழி

பெண்கள் ருது ஜாதக கணித சாஸ்திரம்
வாழி விருத்தம் முற்றிற்று.

# பெண்கள் முகூர்த்தப் பொருத்த சாஸ்திரம்

கணபதி துதி

விருத்தம்

மணமுகூர்த்தஞ் செய்வதற்கு மானிலத்தோர்கட்கன்பாய்
இணங்கியநக்ஷத்திரம்பேர் இசைந்தநற்பொருத்தமெல்லாம்
வணக்கமாய் சொல்வதற்கு வளர்மதி ஜோதியான
கணபதியருள்விரென்று கரங்குவித்துணை துதித்தேன்

கணப்பொருத்தம்

கன்னிகை புருஷனுக்கு கணபொருத்தமு மொன்ருக
நன்மையாயமைந்ததானல் நலமெனப் புகலவேண்டும்
மன்னிய கணப்பொருத்தமும் மாறுபட்டிருக்குமானல்
மின்னமாய்முடியுமென்று விளம்புவீர் ஜாதகர்க்கே

உரை: கன்னிகைக்கும் புருஷனுக்கும் கலியாணஞ் செய்வதானல் இருவருக்கும் ஒரே கணமானல் உத்தமமாகும். அவ்விதமின்றி ஸ்திரீ மனுஷகணமும் புருஷன் தேவகணமுமானலும் உத்தமம், ஸ்திரீ தேவகணமும் புருஷன் மனுஷகணமும், ஸ்திரீ தேவகணமும் புருஷன் இராக்ஷசகணமானலும் மத்திமம், ஸ்திரீ இராக்ஷசகணமும் புருஷன் தேவகணமானலும் ஸ்திரீ ராக்ஷசகணமும் புருஷன் மனுஷகணமானலும் அதமபலனகும்.

உத்தமபலன்

உத்தமபலனென்ருலே உயர்ந்த நற்குடும்பமாக
புத்திர சம்பத்தோடும் பொன்பொருள் பூமிலாபம்
எத்ததியும் விளங்கி எல்லோரும் புகழவாழ்ந்து
மெத்தவும் அன்பாய்நாளும் மேன்மையாய் ஜீவிப்பாரே.

உரை: உத்தம பலனயிருந்தா பெண்ணும் புருஷனும் மனமகிழ்ந்து ஒருவர்க்கொருவர் ரதி மன்மதன் போல சுகஜீவியாய் வாழ்ந்து புத்திர பாக்கியத்துடனும், பொன்பொருள் பூமிலாபத்துடனும் மிகுந்த கீர்த்திப் பிரகாசமாய் பந்து மித்திரர் புகழ்ந்துரைக்குந் தன்மையான தனவந்தராய் ஜீவித்திருப்பார்கள்.



மத்திப பலன்

மத்திப பலனென்ருலே மனைவியும் புருஷனும் தானும்
எத்ததியும் பொருந்தா எவர்களுமிகழ்ந்து நரக்க
சத்ருவென்றே சொல்லும் தன்மையாய் பகைத்திட்டாலும்
புத்திர சம்பத்திதோடே பொருந்தியே ஜீவிப்பாரே.

உரை: ஸ்திரீ புருஷனுடைய கணப்பொருத்தம் மத்திபமானல் எப்போதும் குடும்பத்தில் விரோதமாய் ஒருவர்க்கொருவர் சண்டைசச்சரவு செய்துக் கொண்டு தன்னைப் போன்ற குடும்பஸ்தர் பழித்துப் பரிகாசஞ் செய்யும்படியான கலகஞ் செய்துக் கொண்டிருந்தாலும், ஸ்திரீ புருஷன் அடிக்கடி பகையாயிருந்தாலும் சிற்சில சமயம் சமாதானமாயிருத்தலும், வறுமையால் துயரமடைந்தாலும் சமயோசிதமாய் புத்திர பாக்கியத்துடனே வாழ்ந்திருப்பார்கள்.

அதம பலன்

அதமமாய் கணப்பொருத்தம் அமைந்திட்டாலிவாகாது
பதமுடனுற்ருர் பெற்ருர் பக்ஷமாயிருந்திட்டாலும்
சதிபதி வாழ்ந்திராமல் சிறிது நாளைக்குள் மாள்வரர்
ததியில் ஜாதகத்தைப் பார்த்து சாற்றுவீர் பலனைத்தானே

உரை: அதமபலனய் கணப்பொருத்தமிருந்தால் ஸ்திரீபுருஷனுக்கும் மணஞ்செய்யலாகாது அவ்விதமா யிருக்கும்போது இருவருக்கு மணஞ் செய்தால் பொருந்தி சம்சாரம் செய்யமாட்டார்கள், ஆனல் அவர்களுடைய தாய் தந்தை பந்து மித்திரர் எவ்வளவு சகாயஞ் செய்தாலும் சிறிது நாளில் பெண்சாதியாகிலும் புருஷனகிலும் மரணமாய் விடுவதுடன் அவர்கள் குடும்பம விர்த்தியாகாது. ஆகையால் மணஞ் செய்யும்போது அவர்கள ஜாதக பலாபலனைப் பார்த்து பலன் சொல்லவேண்டும்.

## செவ்வாய்தோஷ பலன்

பன்னிரெண்டுநாலேழெட்டில் பனிரெண்டில் குஜனிருந்தால்
மன்னிய செவ்வாய்தோஷம் மரணமேயாகுமென்று
முன்னோர்க்கலுரைத்தவாக்யம் மூதறிவாலுணர்ந்து
கன்னிகை புருஷனுக்கும் கவனித்து மணஞ் செய்குவீரே.

உரை: செவ்வாய்பகவான் பெண்களின்ஜாதகத்தில் இரண்டு நான்கு ஏழு, எட்டு, பனிரெண்டாமிடங்களிருந்தால் புருஷனை யிழந்து விதவையாவாளென்றும், புருஷனுக்கிருந்தால் மனைவியை இழந்து மறுமணஞ் செய்துக்கொள்வானென்றும பெரியோர்கள் சொன்னவாக்கியத்தை யனுசரித்து பார்த்துதான் திருமணம் செய்வது உத்தமமாகும்.

அன்புடனிருவருக்கும் அங்காரகனிவ்வாருக
நன்மையாயமைந்திருந்தால் நடத்தலாம் மணமுகூர்த்தம்
பன்னிய உலகிலன்பால் பரிகாரஞ் செய்துக்கொண்டு
பொன்பொருள் மைந்தரோடு பொருந்தியே வாழ்குவாரே.

உரை:-பெண்ணுக்கும் புருஷனுக்கும் மேற்குறிப்பித்தவிதமே அங்காரக தோஷமிருந்தால் அதற்குரிய நவக்கிரகசாந்தி செய்துக்கொண்டு சஷ்டி வரதத்தை அனுசரித்தும் சிவசுப்ரமணியரை பூஜித்துக் கொண்டிருந்தால் சதாகாலமும் மகிழ்வாய்பந்துமித்திரர் புகழ்ந்துரைக்குந் தன்மையாய் பொன் பொருள் ஆஸ்தி பூஸ்தியுடனே வெகு மேன்மையான புத்திர பாக்கியங்களைப் பெற்று சுக ஜீவியாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

விருச்சிகம் மகரம்மேஷம் விளங்கிய ராசிதன்னில்
பெருமையாய்க் குஜனிருக்க புதன் வளர்மதியும்பார்க்க
குருபகவானும் நோக்ககுறையொன்றும் அனுகிடாமல்
பொருள் புத்ரபாக்யம்பெற்று பூமியில் ஜீவிப்பாரே.



உரை: செவ்வாய் பகவான், விருச்சிகம், மகரம் மேஷமாகிய இந்த மூன்று ராசிகளில் எங்கேனுமொரு ஸ்தானத்திலிருக்க அவரை புதன் வளர்பிறைச் சந்திரன் குருபகவானும் பார்த்தால் யாதொரு தோஷமுமில்லாமல் மனைவி புருஷனும் வெகு பெருமையாக வாழ்ந்திருந்து பொன் பொருள் பூஸ்தியுடன் புத்ரபாக்கியம் பெற்று பந்து மித்திரர் புகழ்ந்துரைக்கும்படியாக குடும்பரக்ஷகராய் ஜீவித்திருப்பார்கள்,

## தாராபலன்

ஜனம நக்ஷத்திரத்திலிருந்து சாற்றுமந்நாள் நக்ஷத்திரம்
தன்மையாய் எண்ணிப்பார்த்து தாராடலன் சுபமேயாகில்
நன்னய முகூர்த்தமிட்டு நன்மணம் செய்யும்போது
வின்னமாயாகா நக்ஷத்திரம் விலக்குதல் மிகநன்றே

உரை:-ஜன்ம நக்ஷத்திரம் முதல் மணமுகூர்த்தம் செய்யும் நக்ஷத்திரம் வரையில் எண்ணிப்பார்க்கும் போது வந்த தொகையை ஒன்பதில் வகுத்துக் கழித்தால் மீதியாய் நின்ற 2, 4, 6, 8, 9, ஆனுல் உத்தமம் மற்றவை ஆகாது இதனை சரியாய் கவனித்து திருமண முகூர்த்தம் செய்வதுதான் சிரேஷ்டாகும்.

ஜன்மமேகிலேசமுண்டு சம்பத்துரெண்டேயாகும்
துன்பமாம் விபத்துமூன்று சுகமாகும் நாலில் க்ஷேமம்
வின்னயமாய் கார்யங்காணும் விளங்கிய ஐந்துவந்தால்
பன்னிய ஆருந்தாரை பகவான் தன்சகாயமுண்டாம்.

உரை :—ஜன்ம நக்ஷத்திரம் கிலேசமும் திகிலுமாயிருக்கும் இரண்டு சம்பத்து மூன்று விபத்து நான்கில் க்ஷேமம் ஐந்தில் காரிய நாசம் ஆருந்தாரை பகவான் சகாயமுண்டாகும்.

இன்னலாம் வதையேழில் எட்டினில் சுபங்களுக்கு
அன்புடன் ஒன்பதானல் அதிக லாபங்களுண்டு
மன்னிய சுபநக்ஷத்திரம் மைத்தர் பாக்கியமுண்டாகும்
பன்னியவிதமே நன்ருய் பார்த்து நற்பலன் சொல்விரே

உரை :—ஏழாவது தாரை வதையாகும், எட்டாந்தாரை சுபங்களுண்டு ஒன்பதாவது தாரையாலும் அதிக பாக்யமுண்டாகும் ஆகையால் அவரவர்கள் ஜன்ம நக்ஷத்திரத்திலிருந்து அன்றைய நக்ஷத்திரம் வரையிலும் எண்ணி பார்த்து மேற்குறிப்பிந்த விதமே சுபதாரை மிகவும் நன்று அசுபதாரை ஆகாது ஆகையால் உத்தம தாரையில் எந்தகாரியம் செய்தாலும் உத்தமம்.

சுபயோக பலன்

சித்தயோகங்கள் நன்று சிறந்தது அமிர்தயோகம்
அத்தகையானயோகம் அதிர்ஷ்டமும் பொன்பொருள்
புத்திரபாக்யமுண்டு பொன் பூமிலாபமாகும் [சேரும்
எத்தனமும் நன்ருய் எழிலுடன் ஜீவிப்பாரே.

உரை:-மணமுகூர்த்தம் செய்வதற்கு சித்தயோகமாயிருந்தால மிகவும் சிலாக்கியமாகும், அமிர்தயோக மாயிருந்தால் அதனிலும் வெகு நன்மையாகும் அந்த சுபயோகத்தில் மணஞ்செய்தால் இலக்ஷ்மி கடாக்ஷமாம் சுகசவுக்யத்துடன் ஜீவித்திருந்து பொன் பொருள் ஆஸ்தி பூஸ்திதியுடன் புத்திரசம்பத்துடனும் ஜீவித்திருப்பார்கள்.

அசுபயோகபலன்

துன்பமாம் மரணயோகம் சொல்லும் உற்பாதயோகம்
பன்னியபிரபலா ரிஷ்டயோகம் பலபலதுயர்விளைத்து
பொன் பொருளற்று தான்யம் பூமியில் விளைவுமற்று
துன்பமே விளையுமென்று சொல்லுவிர் பலனைத்தானே.

உரை:-மரணயோகம் உற்பாதயோகம் பிரபலா நஷ்ட யோகமாகிய நாட்களில் மணமுகூர்த்தம் செய்தால் மனைவியும் புருஷனும்பல



துன்பமடைந்து பொன் பொருள் பூஸ்திதியுமிழந்து அன்னவஸ்திரத்திற்கே பஞ்சமுற்றுபல விதமாகிய துன்பத்தினல் சகலரும் பகையாகி பந்துமித்திரர்பரிதாபமடையும்படியான ஏழ்மை ஸ்திதியிலிருப்பார்கள்.

கிரகப்பொருத்தம்

கன்னிகை புருஷனுக்கும் கிரகங்கள் பொருத்தம்பார்க்க
பொன்னவன் மாலும் சுக்ரன் பொருந்தியே ஜென்மம் ஐந்
தேழ் ஒன்பதிலிருந்திட்டாலே உத்தமம் மிகவும் நன்று
மன்னும் மூன்ருரெட்டும் விரயத்தி மறைந்திடில் துன்பமே.

உரை:-பெண்ணுக்கும் பிள்ளைக்கும் மணமுகூர்த்த காலத்தில் உதயலக்னம் ஐந்து, ஏழு, ஒன்பதாமிடங்களில் குரு சுக்ரன் புதனுமிருந்தால் மிகவும் உத்தமமாகும் அதன்பலன் புத்திரவிருத்தி திரவியலாபம் பந்துமித்திரர் பெருக்கம் தனதான்ய சம்பத்துடனிருப்பதற்காகும். ஆனல் குரு சுக்ரன் புதனும் உதயலக்னத்திற்கு மூன்று ஆறு பனிரெண்டாமிடத்திலிருந்தால் யாதொரு சுபபலனு மில்லாமல் சதாகாலமும் மனசஞ்சலமும் துன்பம் துயரமும் அனுபவித்துக் கஷ்டநஷ்டமடையச்செய்து சதாகாலமும் மனவிசாரமா யிருப்பதற்காகும்.

சூரியன் செவ்வாய்ராகு சனிகேது ஜன்மம் ஐந்தில்
கூறிய ஏழிலொன்பான் குறித்தஸ்தானத்திலிருந்தால்
காரியபங்கமாகும் கஷ்டநஷ்டத்தோடொன்றும்
பாரில் துன்பமுற்றெந்நாளும் பகைத்திடுவரென்ருேதே.

உரை:-மணமுகூர்த்தஞ் செய்யும் போது உதயலக்னத்திலும் ஐந்து, ஏழு, ஒன்பது, இந்த ஸ்தானங்களிலும் சூரியன் செவ்வாய் சனி ராகு கேது யென்னும் கிரகங்களிருந்தால் சண்டைச்சரவு நேரிட்டுசகலகாரிய பங்கமாய்ப்பலவித கஷ்டநஷ்டங்களுண்டாவதுடன் சதாகாலமும் துன்பமும் துயரமும் துக்கமும் மேலிட்டு மனவிகாரமாய் வறுமையாற் கலங்கச்செய்து பந்து

மித்திரர் பழித்துப் பரிகாசஞ் செய்யும்படியான ஏழ்மைநிலையா யிருப்பதற்காகும்.

இலக்கினம் கடகமாக சந்திரன் குருவும் நிற்க
பலமுடன் மூன்றிலாறில் பருதியும் செவ்வாய் நிற்க
நலமுடன் முகூர்த்தம் செய்தால்தன்மையாய் வாழ்ந்திருந்து
தலமதில் புத்ரரையும் பெற்று தனவந்தராவார்தானே.

உரை:- மணமுகூர்த்தம் செய்யும் போது உதயலக்னம் கடகமாய் அந்த ஸ்தானத்தில் சந்திரன் ஆக்ஷியாகவும் குரு உச்சமாகவுமிருந்தும்; சூரியனும் செவ்வாயும் மூன்று ஆறிலிருந்தால் மிகவும் நன்று புருஷன் பெண்சாதியும் மனதைரியத்துடனும் சத்துருக்களில்லாமல் சதாகாலமும் தைரியமாக ஜீவிப்பதுடன் பொன் பொருள் பூஸ்திதியுடன் புத்திர பாக்கியத்துடனே குடும்பஸ்தராய் சகலரும் புகழ்ந்துரைக்கும்படியான மேன்மையாயிருப்பதற்காகும்.

### மகேந்திரப் பொருத்தம்

கன்னிகைநக்ஷத்திரத்திலிருந்துகணவன் நக்ஷத்திரம்வரைக்
தன்னயமாயெண்ணிநாள் தன்னையெண்ணிப்பார்த்து [கும்
அன்பான சுபதினத்தை ஆராய்ந்து பார்த்துசெய்தால்
மன்னியநன்மையான மகேந்திரப் பொருத்தமே.

உரை:- பெண் பிறந்த நாளின் நக்ஷத்திரத்திலிருந்து புருஷன் பிறந்த நக்ஷத்திரம் வரைக்கும் எண்ணிய நக்ஷத்திரங்களின் கணக்கின் படியே நான்கு ஏழுபத்து பதின்மூன்று பதினாறு பத்தொன்பது இருபத்திரண்டு இருபத்தைந்தாம் நாட்களின் நக்ஷத்திரங்களே மகேந்திரப் பொருத்தமுண்டாகும்.

### இராசிப் பொருத்தம்

கன்னிகைபுருஷராசி கலந்தொன்றாய் விளங்குமானால்
பொன்பொருள் புத்ரபாக்யம் பொருத்தியே இருக்குமானால்
வின்னமாய் ஒன்றுக்கொன்று வேறுபட்டுச் சத்ருவானால்
தன்மையை யடையாமற்றான் ஞாலத்தில்கலங்குவரே.



உரை:- பெண்ணின் ராசியும் புருஷன் ராசியும் ஒரே ராசியானாலும் ஒன்றுக்கொன்று மித்ருவாயிருந்தாலும் நற்பலனை யநுபவிப்பதுடன் பொன்பொருள் பூஸ்திதியும் புத்திரபாக்கியமும் பெற்று சகலரும் புகழ்ந்துரைக்கும் குடும்ப ரக்ஷகராயிருந்துமேன்மை யடைந்திருக்கச் செய்யும். ஒன்றுக்கொன்று பகை இராசியாயிருந்தால் சதாகாலமும் மனைவி மணாளன் ஒருவருக்கொருவர் சத்ருத்தன்மையாக பகைத்துக்கொண்டு சண்டைச்சச்சரவு செய்துக் கொண்டும் குடும்ப கலகஞ்செய்யும் வஞ்சகரின் வார்த்தையைக் கேட்டு வம்பும்வாதும் கலகமும் செய்துக்கொண்டிருப்பார்கள்.

இவ்விதமாகவேதான் இசைந்தநற்பொருத்தம் பார்த்து
அவ்வியமில்லாமற்றான் அளவுபோல் கணித்தாராய்ந்து
செவ்விழிகன்னிகைக்கும் செல்வனும் புருஷனுக்கும்
ஒவ்விய மணஞ்செய்தாலே உத்தமமாகுந்தானே.

உரை:- இவ்விதமாய் ஓர்பெண்ணுக்கும் பின்னைக்கும் பொருத்தம் பார்த்து இராசி லக்கினத்திதி வார நக்ஷத்ரபொருத்த மனைத்தும்சரியாய்ப் பார்த்து மணஞ் செய்வதுதான் சிரேஷ்டமாகும். ஆகையால் இந்த பொருத்தங்கள் பார்த்துசெய்வதுடன் அவர்கள் ஜாதகத்தையும் ஆராய்ந்து பலனுக்கிசைந்த விதமாய் மணமுகூர்த்த சுபதினத்தின் படியேமங்கிலியஞ் சூட்டினால்சதிபதி சுக ஜீவியாய் புத்ர சம்பத்துடனே வாழ்ந்திருப்பார்கள்.

பொருத்தங்களமைந்திடாமல் பெண்ணின் ஜாதகம்பாராமல்
புருஷன் ஜாதகமும் நல்ல பொருத்தமாயமைந்திடாமல்
வருவதுவந்தே தீரும் மணஞ்செய்வோமென்றுரைத்தால்
பொருளில்லாவறுமையாலே பூதலத்தலைகுவாரே.

உரை:- கன்னிகைக்கும் புருஷனுக்கும் பொருத்தமும் சரியாயமைந் திடாமலும் அவர்கள் ஜாதக பலனும் சரியாயமையாமலு மிருக்கும்

போது வருவது வந்தே தீருமென்று மணம் செய்தால் பலவித கஷ்டநஷ்டமும் கவலேயும், வறுமையும் சூழ்ந்து கவலேயால் மெலிந்து மரணமாஇயும் பலவித துன்பங்களெல்லாம் அனுபவிக்கச் செய்யும்,

கன்னிகை புருஷனுக்கும் கலியாணஞ்செய்யும்போது
என்னமோ ஏதோர்வென்று ஏற்றதோர் மணமுகூர்த்தம்
நன்னயமாகச்செய்தால் நவில்நன்மையாமிருந்தால்
அன்புடன் வாழ்ந்திருப்பார் ஆண்டவன் சகாயத்தாலே.

உரை:- சிலசமயம் மணப்பொருத்தம் பாரமலும், காலபலன் ஜாதகபலன்பாராமலும் மணமுகூர்த்தஞ் செய்யும்போது புருஷன் தன துமனேவிக்கு மங்கிலியம் சூட்டினுல் அந்த வேளை பலனுக்கும் ஜாதகபலனுக்கும் சரியாய் ஜீவித்திருக்கும் படியாக முன் ஜனனத்தின் புண்ணிய பலனிருந்தால் அவர்கள் மங்கிலியம் சூட்டும் போது முகூர்த்த மெல்லாம் நன்மை தருவதற்கிசைந்த விதமானபடி சரியாய் அமைந்திருப்பதுடன் அவர்கள் ஜாதகபலனும் மேன்மையாயிருந்தால்மணஞ்செய்துக் கொண்டகணவனும் மனேவியும் மனமகிழ்வாய் வாழ்ந்திருந்துபுத்திர பாக்கியமும்பெற்று தனதான்யசம்பத்துடனும் பந்துமித்திரர் கூட்டத்தின் வெகு மேன்மையாக முன் ஜனனத்தின் புண்ணியத்தினுல் பகவானுடைய அனுக்கிரகம் பெற்று ஆனந்தமாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

முகூர்த்தப் பொருத்த சாஸ்திரம் முற்றிற்று.

---

சீனிவாசா அச்சகம், சூளே, சென்னே-600007.